# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 28. பொருளடக்கம். No. 1.
சித்திரபானுவரு ஆடிமீ கவ

303

உள்ளடக்கம். பக்கம்.

# "ஆனந்தபோதினி"

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| வருடம் 1-க்கு தபாற்கூலி யுள்பட | இந்தியா, ஸிலோன் ... ... | 1—0—0 |
| | பர்மா ... ... | 1—4—0 |
| | பினங், ஸிங்கப்பூர் தென் ஆப்ரிக்கா, பசரா, மெசபொடேமியா முதலிய வெளிநாடுகளுக்கு | 2—0—0 |
| நடந்துகொண்டிருக்கிற வருடத்திய தனிச் சஞ்சிகை விலை | | 0—2—0 |
| சென்ற வருடங்களின் தனிச் சஞ்சிகை விலை | | 0—3—0 |

ஒரு வருடத்திற்குக் குறைந்த சந்தா கிடையாது.

(1) சந்தாதாரராய்ச் சேருகிறவர்கள் பூரணமாகப் பெயரை எழுதி யனுப்பவேண்டும்.

(2) சந்தாத் தொகையை முன்னுடிச் செலுத்தியாவது அல்லது வி. பி. யில் பணம் கட்டியாவது பத்திரிகை பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போது சேர்ந்தாலும் அவ்வருட ஆடிமாத முதல்தான் கணக்கு வைக்கப் பட்டு ஆடிமாத சஞ்சிகை முதல், பத்திரிகை அனுப்பப்படும்.

☞ (3) சஞ்சிகையை வி. பி. யில் வரவழைப்போர் ரிஜிஸ்டர் சார்ஜ் 3-அணுவோடு (18-4-1921 முதல் மணியார்டர் கமிஷன் 10-ரூபா வரையில் 2-அணு வாகையால்) அந்தக் கமிஷன் 2-அணு, வி. பி. க்குத் தபால் சார்ஜ் 0-0-6. ஆக 0-5-6-அதாவது 6-அணு சேர்த்து ரூபா 1-6-0 கட்டி வி. பி. யைப் பெறவேண்டும். மணியார்டர் அனுப்பினுல் 1-2-0 மட்டுமே யாகும். ஆதலால் முன்னுடி மணியார்டர் அனுப்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்வதே நலம், இதைக் கவனிக்கவும்

(4) யாருக்கேனும் சஞ்சிகை சேராவிட்டால் அவர்கள் அம் மாதம் 15-ம் தேதி வரையில் பார்த்து அதற்குமேல் அதே தமிழ்மாத முடிவிற்குள் அவ்விவரத்தைத் தெரிவித்தால்தான் மறுபடி யனுப்பக்கூடும். பிறகு தெரிவிப்போர் கிரைய மனுப்பிப் பெறவேண்டும்.

(5) இடம் மாறும் சந்தாதாரர்கள் அடுத்த சஞ்சிகை தங்களுக்குப் புது விலாசத்திற்கு வந்து சேரும் வண்ணம் தபாலாபீஸோடு ஏற்பாடு செய்துகொண்டு நமக்குப் புது விலாசத்தை யறிவிக்கவேண்டும். இன்றேல் அடுத்த சஞ்சிகை பெரும்பாலும் பழைய விலாசத்திற்கே போய்விடும். அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.

(6) சந்தா நம்பரைக் குறிக்காமல் எழுதும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. அத்தகைய கடிதங்களால் நேரிடும் தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளி யல்ல. பதிலை விரும்புவோர் ரிப்ளை கார்டாவது தபாற் பில்லையாவது அனுப்பினுலன்றி விடை யளிக்கப்பட மாட்டாது.

(7) வியாசங்களை எழுதுவோர் சுத்தமாக இலக்கணப் பிழையின்றித் தங்கள் உண்மைப் பெயருடன், மத தூஷணை, பிறர் தூஷணை, துரைத்தன விரோதம் முதலியவைகளின்றியும், பொது ஜனங்கள் விரும்பக்கூடியனவாக வும் எழுதவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| Life Subscription ஜீவிய சந்தா | இந்தியா, ஸிலோன் | ரூபா | 15—0—0 |
| | பர்மா, முதலிய வெளிநாடுகளுக்கு | ,, | 25—0—0 |

Telephone No. 3005. Telegram :—"Ananda Bodhini", Madras.
விலாசம்:—கா. முனிசாமி முதலியார், "ஆனந்தபோதினி"
[illegible] சின்னதம்பி முதலி தெரு, தபால் பெட்டி நெ. 167, [illegible]

### காதலருக்கு இன்பந்தரும் நூதன நூல்

# இன்பவாழ்க்கையின் இரகசியங்கள்

அழகிய சீமை கலிகோ பைண்டு செய்யப்பட்டு கண்ணைக் கவரத்தக்க அநேக ஆப்டோன் படங்களுடன் **400** பக்கங்களுக்கு மேல் அழகிய பெதர்வெயிட் பேபரில் சுத்தமான எழுத்தில் அச்சிடப்பட்டது.

**(நான்காம் பதிப்பு)** **இதன் விலை ரூபா 2.**

*ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூபா 1—8—0.*



***இது காதலர்க்கு இன்பந்தரும் நூதன நூல்; போகானந்தத்தை விரும்பும் பூமான்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த ஆனந்த இரகசிய சாஸ்திரம்.***

***இது காதல் இன்பத்தை உள்ளவாறுணர்ந்து அனுபவித்து, இல்வாழ்க்கையை நல்வாழ்க்கையாக நடத்திப் பேரானந்தக் கடலில் மூழ்கி நற்சந்ததியைப்பெற்று, மறுமைப் பயனையும் அடைதற் கேதுவாயிருக்கும்படி பற்பல இன்பமார்க்கங்கள் நிறைந்த இந்நூல் இப்போது இனிய தமிழ்நடையில் வெளியிடப் பெற்றிருக்கிறது. இதில் நமது பூர்வீக கொக்கோக சாஸ்திரத்தின் சாராம்சங்களும், அகப்பொருள் நூல்களின் கருத்துகளும், தேகதத்துவ சாஸ்திரங்கள், வைத்திய சாஸ்திரங்கள் முதலியவற்றிற் கூறப்பட்டிருக்கும் பல அரிய விஷயங்களும், நாகரம், தெலுங்கு, கன்னடம், மராட்டி, அரபி, இந்துஸ்தானி, பார்ஸி, இங்கிலீஷ், பிரெஞ்சு முதலிய***

பாஷைகளிலுள்ள இன்பரச நூல்களின் கொள்கைகளும், இன்ப வா[illegible]யின் இரகசிய முறைகளும், அவற்றிற்குப் பொருத்தமான மனத்[illegible] கண்ணையும் கவரும் ஆப்டோன் படங்களும், லயன் பிளாக்குகளும், [illegible]லும் இல்வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய அநேகம் விஷயங்களு[illegible] சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதனை வாங்கிப்படிப்போர் உண்மைக் காத[illegible] என்பது இன்னதென்பதையும், இன்னவிதமானவர்களை மணம் புரிந்தால்தான் இன்பம் ஏற்படுமென்பதையும், இல்வாழ்க்கையில் இன்னவித மணக்கிரமங்களை அனுசரித்தால்தான் அளவற்ற ஆனந்தமுற்று அழகிய சந்ததிகளைப் பெற்று ஜீவித்திருக்கலாமென்பதையும் உணர்ந்து இவ்வுலகத்தில் அடைய வேண்டிய இன்பத்தையும், வறுமை இன்பத்தையும் அடைவார்கள். இதனை ஒவ்வொரு குடும்பத்தினரும் வாங்கி வாசிக்கலாம்.

ஷை தெலுங்கு பதிப்பு விலை ரூபா 2.

ஸ்ரீமத்

# விவேகானந்த சுவாமிகள்

## விரிவான திவ்ய சரித்திரம்

**(2-ம் பதிப்பு) இதன் விலை ரூ 4.**

**ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூ. 3.**

சுவாமிகளின் அதியற்புதமான சரித்திரமும், அரிய உபதேசங்களும் அனுபவசாரமான கடிதங்களும், மேலான பிரசங்கங்களும் இடையிடையே விளங்குகின்றன. சுவாமிகள் அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய பிரதேசங்களில் பூசஞ்சாரம் செய்து வேதாந்த விஷயங்களை விரிவாக உபன்யசித்து [illegible]ந்து மதத்தை நிலைநாட்டியது இதில் விரிவாக எழுதப்பட்டிருக்கிறது. இவ்வளவு விரிவான சரித்திரம் இதுவரை எவராலும் வெளியிடப்படவில்லை.

## ஆக்ட் புஸ்தகங்கள்

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| இந்தியன் பினல் கோட் சட்டம் | 3 | 0 | பரம்பரை கிராம உத்தியோகஸ்தர்கள் சட்டம் | 1 | 0 |
| கிரிமினல் லா | 3 | 0 | இந்துதேச சாட்சி ஆக்ட் | 1 | 0 |
| ஸிவில் லா | 3 | 0 | இன்கம் டாக்ஸ் சட்டம் | 1 | 0 |
| புதுவிவகார சிந்தாமணி | 2 | 8 | ஸ்டாம்பு ஆக்ட் | 0 | 12 |
| புதிய ஹிந்து லா | 2 | 0 | ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் | 0 | 10 |
| முகம்மதியன் லா | 2 | 0 | டிரஸ்டிகள் சட்டம் | 0 | 12 |
| லோகல் போர்ட் ஆக்ட் | 2 | 0 | கால நிர்ணயச் சட்டம் | 0 | 8 |
| கிராம முன்சீப் சட்டம் | 1 | 8 | நில ஆக்கிரமிப்பு என்குரோச்மென்ட் சட்டம் | 0 | 4 |
| பஞ்சாயத்து சட்டம் | 1 | 4 | கிராமச் சுகாதாரம் | 0 | 2 |
| எஸ்டேட் லாண்டு ஆக்ட் | 1 | 4 | | | |
| கர்ணம் டெக்ஸ்ட் | 1 | 4 | | | |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# திருவிளையாடற் புராண வசனம்

**64 திருவிளையாடல்களுக்கும் ஐதீகப் படங்கள் உள்ளன.**

**காலிகோ பைண்டு செய்தது விலை ரூ. 2.**

சிவபெருமான், சோமசுந்தரக் கடவுளாக மதுரையம்பதியில் எழுந்தருளி அடியார்கள் உய்யும்பொருட்டு நடத்திக் காட்டிய அற்புதத் திருவிளையாடல்கள் அறுபத்துநான்கும் இதில் அடங்கி யிருக்கின்றன. இந்நூல் சிவபெருமானுடைய மகிமைகளைத் தெள்ளிதில் உணர்த்தும். இன்னும் சிவபெருமான் அடியார்க்கெளியன் என்பதையும், அவர் தம்மை நம்பின பக்தர்களை ஆட்கொள்ளுதற்கு எத்தகைய தொழிலையும் புரிந்து அவர்களுக்கு உதவிசெய்வான் என்பதையும், சிவனடியார் சிறப்புகளையும், எல்லோருக்கும் விளக்கமாகத் தெரிவிக்கும்.

# ஞானசெல்வாம்பாள் அல்லது

## இரண்டு சகோதரிகள் (5-பாகங்கள்)

ஞானம்பாள் செல்வாம்பாள் என்ற இரண்டு சகோதரிகளே இந்நாவலில் கதாநாயகிகள். இந்த கன்னிகைகள் மேலதிகாரமின்றித் தங்கள் பிரியப்படி நடக்குமாறு விடப்பட்டனர். அன்னிய வாலிபரிடம் தாராளமாய்ப் பழக்கப்பட விடப்படுவதே நல்ல நாகரீகமென்று கருதுவது முதலிய ஆசாரங்களால் விளையும் தீங்குகள் அனுபவமாய் விளக்கப்பட்டிருக்கின்றன. அதோடு பெரும்பாலான கன்னிகைகள் உலக அனுபவமில்லாத அந்தப் பருவத்தில் தங்களுக்குத் தகுதியான கணவர்களைத் தாங்களே தேர்ந்தறிந்துகொள்ளச் சக்தியற்றவர்களென்பதும், அயோக்கியர்களது வஞ்சக வலையில் அவர்கள் எளிதில் சிக்கிக்கொண்டு தங்கள் வாழ்நாள் முழுவதையும் பெருந்துன்பத்தை யனுபவிக்க நேருமென்பதும் இக்கதையால் நன்கு விளங்கும்.

இக்கதாநாயகிகளின் நடக்கைகளால் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் குணங்களைக் கைவிடாமல் நன்னெறியைக் கடைப்பிடித் தொழுகும் கன்னிகை முடிவில் நல்ல பலன்களையும், மேலான பதவியையும் அடைவாளென்பதும், அற்ப போகங்களிலும் படாடோப வாழ்க்கைகளிலும் இச்சை வைப்பவள் துன்பத்தையே யடைவாளென்பதும் தெளிவாய் நிரூபிக்கப்படுகிறது.

இக்கதையில் சம்பந்தப்பட்ட முக்கியமான ஆடவனாகிய தேவராஜு என்பவனுடைய சரித்திரத்திலும், கிருஷ்ணராஜு மச்சநாதன் என்பவர்கள் சரித்திரத்திலும் மிக்க ஆச்சரியமும் மனதை யடியோடு கவர்ந்து கொள்ளத்தக்க அபூர்வ சம்பவங்களும் நிறைந்திருப்பதோடு பல அரிய நீதிகளும் நன்னெறிகளும் அனேகம் பொதிந்து கிடக்கின்றன என்பது வாசிப்போர்க்கு நன்கு புலப்படும். **5-பாகங்கள் விலை 9—10—0.**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.**

ஆசிரியரின்றி ஆங்கிலந் தெரிந்து கொள்ளும் **ஆனந்த**

# ஆங்கில பாஷா போதினி

**(நான்காம் பதிப்பு)** **விலை ரூபா 2.**

**ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூ. 1—8—0.**

எம். ஏ., எல். டி. பட்டம் பெற்ற ஆங்கில போதகாசிரியராகிய திருவாளர் எம். ஷண்முகசுந்தர முதலியரவர்களால் இயற்றப்பெற்ற உயர்ந்த திருத்தங்களோடும், சிறந்த அமைப்புகளோடும், நிறைந்த போதனைகளோடும் இப்பதிப்பு வெளிவந்திருக்கிறது.

**800-பக்கங்களுக்குமேல் திக்கு காகிதத்தில் அச்சிடப்பட்டு சீமை காலிகோ பைண்டு செய்யப்பட்டது**

பற்பல கதைகளும், பாரதக் கதைகளும், ஸ்ரீ கிருஷ்ணர் சரித்திர சுருக்கமும் அடங்கியது. அவற்றிற்குப் பொருத்தமான அழகிற் சிறந்த 16-ஆப்டோன் படங்களுடன் கூடியது.

இக் காலத்தில் இங்கிலீஷ் இராஜ பாஷையாயிருப்பதால் அதை எல்லோரும் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமா யிருக்கின்றது. அப்படிப் படிக்காத சிலர், பல சங்கடங்களை அடைகின்றனர். ஆதலின், அத்தகையினர் கற்றுக் கொள்வதற் குதவியா யிருக்கும்படி ஆங்கில பாஷையைத் தமிழ் மக்களுககு எளிதில் போதிக்கும் அரிய போதரூ முறை நூலாகிய இது பலர் வேண்டுகோளுக் கிணங்க வெளியிடப் பெற்றிருக்கிறது.




இதனைச் சிரத்தையுடன் படிப்பவர் பணச் செலவில்லாமலும், வேறெவ்விதக் கஷ்டமில்லாமலுப் மிக எளிதில் இங்கிலீஷ் பேசவும் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொள்ளலாம். ஆயிரக்கணக்கான பணச் செலவு செய்து 10 வருஷம் படிப்பதனல் எவ்வளவு ஆங்கில தேர்ச்சி யுண்டாகுமோ அவ்வளவு தேர்ச்சியை ஒரு மாதம் அல்லது 40-நாளில் இப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு அடைந்து, ஆங்கிலத்தை அதி விரைவில் படித்துக் கொள்ளலாம் இதில் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக்கொள்ளத்தக்க மார்க்கங்கள் விளக்கப்பெற்றிருக்கின்றன.

இதில் இதுவரை வெளிவராத நூதன பாட முறைகளெல்லாம் வெளியிடப்பட்டிருக்கின்றன. இன்னும் ஒரு ரூபா முதல் 10 ஆயிரம் ரூபாவரை சம்பளப்பட்டிக் கணக்கு, வட்டிக் கணக்கு, ஒவ்வொரு தேசத்திலும் ஏற்படும் மணி வித்தியாசம், அன்னிய தேச நாணய மதிப்பு முதலியன வெல்லாம் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது.

மேற்படி தெலுங்கு பதிப்பு விலை ரூபா 2.

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# இரத்தினபுரி இரகசியம்

## ஓர் மகா அற்புதமான புதிய நாவல் (9-பாகங்கள்)

இது நாவல் எழுதுவதில் ஒப்புயர்வற்றவரென்று உலகப் பிரசித்தி பெற்ற G. W. M. ரெய்னால்ட்ஸ் என்பவரால் வரையப்பெற்ற அதியற்புதமான நாவல்களில் முதன்மைபெற்ற நாவலின் மொழிபெயர்ப்பு. இது காறும் ஒருவராலும் தமிழில் எழுதப்படாதது. தற்காலத்தில் தமிழ் நாவல்கள் எழுதுவதில் பிரக்யாதிபெற்றவரும் தமிழில் அநேக நாவல்கள் மொழிபெயர்த் தெழுதியவருமாகிய ஸ்ரீமான் ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியது.

இந்த நாவலில்தான் கிரந்தகர்த்தா தமது இணையற்ற சாமர்த்தியம் முழுவதும் வெளியிட்டிருக்கிறார் என்பது ஆங்கிலத்தில் அவர் நாவல்களை வாசித்த யாவரும் அறிந்ததோருண்மையாகும். இதில், வேறு எக் கதைகளிலும் நாம் கேட்டிராத அற்புதங்களும் நெஞ்சு திடுக்கிட்டுத் திகைக்கக் கூடிய சூட்சிகளும் நிறைந்திருப்பதோடு, ஆடவர்களின் பலபேதமான நடவடிக்கைகளும், அவற்றாலடையும் பலன்களும், ஸ்திரீகளின் குணபேதங்களும், கற்புடைய ஸ்திரீகள் தங்கள் கற்பைக் காக்கும் விஷயத்தில் உபயோகிக்கும் துணிகரமான வீரதீர சாமர்த்தியச் செயல்களும் தெளிவாய் விவரிக்கப்பட் டிருக்கின்றன. இன்னும் தற்கால நாகரீகத்தை யொட்டி நமது நாட்டாருக்கு இன்னின்ன ஆசாரங்கள் நன்மைபயக்குமென்றும், இன்னின்ன ஆசாரங்கள் தீமை பயக்குமென்றும், நமது மாதர் கடைப்பிடிக்க வேண்டிய ஆசார வொழுக்கங்கள் இன்னின்னவை யென்றும் அந்தந்தச் சமயங்களில் மனதிற் றரிக்கும் வண்ணம் விவரிக்கப்பட் டிருக்கின்றன. இது ஆதிமுதல் அந்தம்வரையில் மனதை முழுதும் கவரக்கூடியதென்பது கூறாமலே விளங்கும்.

| | | | |
|---|---|---|---|
| முதல் இரண்டு பாகங்கள் | விலை | ரூபா | 4—0—0 |
| 3-முதல் 6-வரை 4 பாகங்கள் | ,, | ,, | 7-10—0 |
| 7-ம் பாகம் | ,, | ,, | 2—4—0 |
| 8-ம் பாகம் | ,, | ,, | 2—4—0 |
| 9-ம் பாகம் | ,, | ,, | 2—0—0 |

# பத்மாசனி

(இது ஓர் அதிசயமான துப்பறியும் நாவல்)

இதில் கூறப்படும் கள்ளர்களுடைய சாமர்த்தியங்களும், ஒரு பெண்பிள்ளை தன் சாமர்த்தியத்தாலும் தைரியத்தாலும் அக் கள்ளர் எண்ணங்களை நிறைவேறவொட்டாமல் செய்வதும், அவர்களின் குற்றங்களைக் கண்டுபிடிக்க ருசுவுகள் கண்டுபிடிப்பதும், ஒரு நிரபராதிமேல் வந்த அபாண்டமான குற்றத்தை தவறு என்று ருசுப்படுத்தி அவனைச் சிறை மீட்பதும் படிக்கப்படிக்கச் சந்தோஷத்தை விளைவிக்கும். இது நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. இதன் விலை அணா 14.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



| தொகுதி 27 | சித்திரபானுஸு வைகாசிமீ ௧உ<br>1942ஸு மேமீ 14உ | பகுதி 11 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

சாதலும் பிறந்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருள் தந்த எந்தலைவனை மலையின்
மாதினை மதித்து அங்கு ஓர்பால் கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்த எம்மானை
ஏதில்என் மனத்தக்கு ஓர் இரும்பு உண்ட நீரை
எண்வகை ஒருவனை எங்கள் பிரானைக்
காதில் வெண்குழை யனைக்கடல் கொளமிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. (1)

---

மற்றொரு துணை இனி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற்றேன் மறவா வரம்பெற்றேன்
சுற்றிய சுற்றமுந் துணையென்று கருதேன்
துணையென்று நான் தொழப்பட்ட ஒண்சுடரை
முத்தியும் ஞானமும் வானவர் அறியா
முறைமுறை பலபல நெறிகளுங் காட்டிக்
கற்பனைக் கற்பித்த கடவுளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. (2)

---

திருத்தினை நகர்உறை சேந்தன் அப்பன்என்
செய்வினை யறுத்திடுஞ் செம்பொனை யம்பொன்
ஒருத்தனை அல்லது இங்குஆரையும் உணரேன்
உணர்வு பெற்றேன் உய்யுங்காரணர் தன்னால்
விருத்தனைப் பாலனைக் கனவிடை விரவி
விழித்துஎங்குங் காணமாட்டாது விட்டு இருந்தேன்
கருத்தனை நிருத்தஞ் செய்காலனை வேலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. (3)

# அரும்பொருள் விளக்கம்

பொ-ள் (இ-ள்.) ...றப்பையும் பிறப்பையும் நீக்கி அடியேனை ஒரு உருவாக் ...ருவருளை வழங்கிய என் தலைவனை, இமயவல்லியைக் காதலித்து வலப்பாகத்தில் கொண்ட கடவுள் மணியை, வானத்திலிருந்து இழியும் கங்காதேவியைத் தன் சடாபாரத்தில் தாங்கிய எம்பெருமானை இரும்பு உண்ட நீரைப்போல், யாது மில்லாது சூன்யமா யிருக்கும் என் மனத்துக்குள் புகுந்திருப்பவனை அஷ்டமூர்த்தமா யிருக்கும் ஒப்பற்றவனை, எங்கள் பெருமானை, திருச்செவிகளில் வெண்குழைகளைப் பூண்டவனை, கடல் கொண்ட காலத்தில் தெப்பம்போல் மிதந்த திருக்கழுமலம் என்னும் வளப்பமிக்க நகரில் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தேன். (எ-று.)

இறைவன் எண் குணங்களை யுடையவன்; எட்டு மூர்த்தங்களா யிருப்பவன் என்னும் உண்மையை 'எண்வகை ஒருவனை' என்ற ஒரு சொல்லில் பெற வைக்கிறார். (1)

(இ-ள்.) அடியேனுக்கு வேறொரு துணை மேலுலகிலும் காணவில்லை; ஆண்டவனது திருவருளை எதிர்பார்த்து வருந்தினேன்; இதன் பயனாக, மறக்க முடியாத அரிய வரத்தைப் பெற்றேன்; என்னைச் சூழ்ந்துள்ள உற்றார் உறவினரையுந் துணை என்று நான் கருதமாட்டேன்; எனக்கு அரிய துணை யென்று நான் கருதித் தொழுத ஒளிபொருந்திய ஜோதியை முத்தியையும் ஞானத்தையும் எப்படி அடைவதென தேவர்களும் அறியாத முறைகளையும், பல நல்வழிகளையும் காட்டிக் கற்பனை கற்பித்த கடவுளை அடியேன் திருக்கழுமலம் என்னும் வளப்ப மிக்க நகரில் கண்ணாரக் கண்டு களித்தேன். (எ-று.)

இம்மைக்கும் மறுமைக்கும் எங்கும் உயிர்களுக்கு உற்ற துணையா யிருப்பவன் இறைவ னொருவனே என்பதை, 'மற்றொரு துணை.........துணை யென்று நான் தொழப்பட்ட ஒண்சுடரை' என்ற அடிகளில் விளக்குகிறார்.

(இ-ள்.) திரு பொருந்தி யுறையும் நகரில் எழுந்தருளி யிருக்கும் சேந்தனும் அப்பனுமான என் கருமவினைகளை அறுத்து ஒழிக்கும் செம்பொன்மேனியனை, அழகிய பொன்போன்ற ஒப்பற்றவனை அல்லாது இவ்வுலகில் யாரையும் உணரமாட்டேன்; நான் உய்யவேண்டிய காரணத்தினால் நல்லுணர்சியை அடைந்தேன். விருத்தனாகவும் பாலனாகவும் இருந்தவனைக் கனவினில் கலந்து கண்விழித்து எங்கும் காண முடியாதுவிட்டு இருந்தேன்; ஐந்தொழில் இயற்றுங் கர்த்தனை, நடனஞ் செய்யும் நடராஜனை, கடலில் மிதந்த திருக்கழுமலம் என்னும் வளப்பமிக்க நகரில் கண்ணாரக் கண்டு களித்தேன். (எ-று.)

மக்கள் இவ்வுலக வாழ்க்கையில் உய்யும் வழியைப் பெற வேண்டுமானால், ஆண்டவனை உணரப்பெறும் உணர்வு வரவேண்டும் என்னும் அரிய பெரிய உண்மையை, "ஒருத்தனை அல்லது இங்கு ஆரையும் உணரேன், உணர்வுபெறறேன் உய்யுங் காரணத்தினால்" என்ற அடிகளில் தெளிவித்திருக்கிறார். (3)




# "தவறு செய்யாதீர்கள்!"

இன்று யுத்தப் பயங்கரம் உலக முழுவதையும் கவ்விக் கொண்டிருக்கிறது. ஆனாலும், இதில் மற்ற தேசங்களை விட, பிரிட்டனுக்குத்தான் பெரும் பாதகம் ஏற்பட்டிருக்கிறது. மகத்தான கஷ்ட நஷ்டமும் துன்பமும் நேர்ந்திருக்கின்றன. ஆகவே, இத் துன்பத்தை—கஷ்டத்தைப் போக்க பிரிட்டிஷ் மக்கள் ஒவ்வொருவரும் முயன்று வருகின்றனர். இத் துன்பத்தைத் தவிர்க்க என்ன வழி என்று யோசித்து வருகின்றனர். இங்நிலையில் பிரிட்டனின் துன்பம் நீங்க வழியொன்றை நமது காந்தியடிகள் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது. "பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்தாவது உடனே ஒழுங்கான முறையில் அடியோடு விலகிவிட வேண்டும். அத்துடன், அவர்கள் பொதுவாக, ஐரோப்பாவுக்கு வெளியே பிரிட்டிஷ் வசமுள்ள எல்லா நாடுகளிலுமிருந்து விலகவேண்டியது நியாயம். அவ்விதம் பிரிட்டிஷார் செய்தால், அதுவே தீரத்துடன் கூடிய சிறந்த காரியமாகும். 'ஏகாதிபத்தியக் கொள்கை அடியோடு ஒழிந்தால் நாஸிக் கொள்கையும் பாஸிஸ்டு கொள்கையும் மாய்ந்தொழியும். ஏகாதிபத்தியக் கொள்கையின் விளைவாகவே மேற்கண்ட இரண்டு கொள்கைகளும் கிளைத்து வருகின்றன. இது ஒழிந்தால் இவற்றின் கூர் மழுங்கி விடும்" என்று அவர் பிரிட்டிஷாருக்கு அரிய யோசனை கூறி யிருக்கிறார்.

"எங்களுக்குத் தொல்லை நேர்ந்துள்ள இச் சமயத்தில் எங்களிடம் துவேஷம் பெருகி வருகிற தென்றால், அது எங்களுக்கு மிகுந்த வருத்தத்தைத் தருகிறது...............துன்பம் நேர்ந்த காலத்தில் அவர்களுக்குச் சற்று ஆதரவு காட்ட வேண்டாமா?" என்று ஆங்கில நண்பர் ஒருவர் கேட்டுள்ள ஒரு கேள்விக்குப் பதிலாகவே, மேற்குறித்தவாறு கூறி யிருக்கிறார்.

காந்திஜிக்குக் கடித மெழுதிய இந்த ஆங்கில நண்பர் மட்டுமல்ல; ஐரோப்பாவில் யுத்தந் தொடங்கியதிலிருந்து, பிரிட்டன்

நடக்கும் யுத்தத்தில் இந்தியாவுஞ் சேர்ந்து உதவி புரிய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளும் ஒவ்வொரு ஆங்கிலேயரும் இவ்விதமே கூறியிருக்கின்றனர். 'பிரிட்டன் யுத்த நெருக்கடியில் சிக்கிக் கொண்டிருக்கும் இச் சமயத்திலோ இந்தியர் சுதந்திரங் கேட்பது? சுயாட்சிக்காகப் பேரம் பேசுவது?' என்றெல்லாம் கூடப் பலர் அங்கலாய்த்தனர்; ஆத்திரத்துடன் கேட்டனர். "ஆமாம்; 'இப்போது ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையுங் காக்கவே நாங்கள் யுத்தஞ் செய்கிறோம்' என்கிறீர்களே? அப்படியானால், இந்த யுத்த நோக்கம் எங்களுக்கும் பொருந்துமா? எங்களுக்கும் சுதந்திரமுண்டா? இந்த யுத்தத்தில் எங்களுடைய அந்தஸ்து என்ன என்று தெரிந்தால் தானே எங்களாலியன்ற உதவியைச் செய்ய முடியும்? என்றே இந்திய தேசியத் தலைவர்கள் கேட்டனர். ஆனால், அதற்கு இன்று வரை பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்து சரியான பதில் கிடைக்கவில்லை. 'இந்த யுத்தம் முடிந்த பின்னர் தான் இந்தியாவுக்கு குடியேற்ற நாட்டந்தஸ்து (அப்போது கூட பரிபூரண சுதந்திரம் இல்லை.) அளிப்பது பற்றி யோசித்து ஒரு முடிவு செய்யப்படும்' என்று மழுப்பலான பதில் கூறப்பட்டு வந்தது. வர வர மிக நெருக்கடியாக நிலைமை போய்க் கொண்டிருப்பதை யுத்தேசித்து இந்தியாவின் ஒத்துழைப்பை நாடி சமீபத்தில் தூது வந்த பிரிட்டிஷ் யுத்த மந்திரி சபையைச் சேர்ந்த ஸர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸ், இந்திய அரசியல் தலைவர்களுடன் இரண்டு வார காலமாகப் பேசிய சமரசப் பேச்சு கூட, அமெரி அடிக்கடி பாடிவரும் பல்லவியான, "ஆகஸ்டு அறிக்கை"யை அடிப்படையாகக் கொண்டே தயாரிக்கப்பட்ட பிரிட்டிஷ் யுத்த மந்திரி சபைத் திட்டத்தின் மீது தான் நடந்ததால், வெற்றியுறுமற் போய் விட்டது. இவ்விதம் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் மனம் இந்திய விஷயத்தில் சிறிதும் மாறாதிருப்பதனால் தான் இந்தியர் தங்கள் நாட்டிலும் யுத்த பீதி மிகுந்து வரும் நிலையிலும், நிராயுத பாணிகளான தாங்கள் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்திருந்து வருகின்றனர். ஆகவே, பிரிட்டிஷாருக்கு யுத்த விஷயத்தில் போதிய ஆதரவு காட்டவில்லை என்று அவர்கள் மீது குறை பட்டுக் கொள்வதில் என்ன பிரயோஜனம்? "தேசிய வாதிகளுக்கு ஊக்கம் பிறப்பதற்கான வழி என்ன இருக்கிறது? சுதந்திரம் கிடைத்தாலல்லவா இந்தியருக்கு உற்சாகமும் ஊக்கமும் பிறக்கும்? பிரிட்டிஷார் இந்தியாவுக்கு இழைத்து வரும் தவறை முதலில் போக்கவேண்டும். வெற்றிக்குப் பின்னால் செய்யலாமென்று இல்லாமல் அந்த காரியத்தை முன்னாலேயே செய்ய வேண்டும்" என்று மகாத்மா காந்தி இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையையும் பிரிட்டிஷார் இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்க

மருத்துவரும் பிடிவாத குணத்தையும் குறிப்பிட்டுப் புத்திமதி கூறி யிருக்கிறார்.

இந்தியர்கள் பிரிட்டிஷாரைத் துவேஷிப்பதற்குக் காரண மிருக்கிறதென்று மேற்படி ஆங்கில நண்பர் உணர்ந்திருக்கிறார். "இந் தியர்கள் விரும்புவதுபோல் நாங்கள் அவ்வளவ அதிகமாக நியாய புத்தியுடன் நடந்துகொள்ளாம லிருந்திருக்கலாம். ஆனால், ஒரு தவறைத் திருத்த இன்னொரு தவறைச் செய்வதா? விரோதி யாக இருந்தாலும் துன்பம் நேர்ந்த காலத்தில் அவர்களுக்குச் சற்று ஆதரவு காட்ட வேண்டாமா?........பழைய பாவத்தை மறந்து புதிதாகத் தோன்றியுள்ள ஆங்கில வாலிபர்களின் நல் லெண்ணத்தின் மீதாவது நாங்கள் நம்பிக்கை வைக்கக்கூடாதா? இந்தச் சந்ததியார் இனி ஏகாதிபத்தியக் கொள்கையை மனத்தில் சிந்திக்கவும் மாட்டார்கள்" என்று கூறியதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.

இவ்வளவு தூரம் தங்கள் வர்க்கத்தாரின் தவறை உணர்ந் திருக்கும் மேற்படி ஆங்கில நண்பர் மகாத்மாவின் புத்திமதியை ஏற்றுக் கொள்வாரென்று நம்புகிறோம்.

"இந்த யுத்த காலத்திலேயே (யுத்தத்திற்குப் பிறகல்ல) பிரிட்டிஷாரிடம் இந்தியரும் திட்டமாக விலகிப்போவது நல மென நான் உறுதியுடன் நம்புகிறேன். அவ்விதம் செய்தால் இரு தரப்பாருக்கும் நல்லது. உலக நிலையை நான் உற்று நோக் கினல் மனக்கசப்புதான் நாளுக்குநாள் அதிகரித்து வருவது தெளிவாகத் தெரிகிறது. பிரிட்டிஷார் செய்யும் காரியம் ஒவ் வொன்றும் அவர்களின் நன்மைக்கான காரியமாகவே இருக் கிறது. அவர்களின் பாதுகாப்புக்காகத்தான் அவர்கள் ஏற்பாடு செய்து கொள்ளுகிறார்கள் எனப் பிறர் கூறுவது எனக்குச் சரி யென்றே தோன்றுகிறது. பொது நன்மைக்கான காரியமெது வுமே யில்லை. பிரிட்டிஷார் தங்களுடைய பரம்பரை குணத்தை மாற்றிக்கொள்வதென்றால், அது சுலபமான காரியமன்று. ஜாதிச் செருக்கு பாராட்டுவது ஒரு நல்ல காரியமாகப் பாவிக்கப்படு கிறது. இது இந்தியாவில் மட்டுமல்ல; ஆப்பிரிக்காவிலும் இவ் விதமே நடக்கிறது, பர்மாவிலும் இலங்கையிலும்கூட இக்கதி தான். ஜாதிச் செருக்கு பாராட்டியே இந்நாடுகளை அடக்கி யாண்டு வருகிறார்கள். இது மகா கொடிய நோய். இதற்குக் கடு மையான சிகிச்சை வேண்டும்" என்று மகாத்மா பிரிட்டிஷார் பால் தாம் கண்ட குறைகளை எடுத்துக்காட்டி, இதுவரை செய்து வந்த மேற்படி தவறுகளை இனியும் செய்யாதீர்கள் எனக் கேட் டுக் கொண்டிருக்கிறார். மிக நெருக்கடியான இச்சமயத்திலாயி னும் பிரிட்டிஷ் மக்களுக்கு மகாத்மாவின் இதோபதேசம் நற் புத்தியை ஏற்படுத்துமா?

# சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்



## 28-வது ஆண்டின் முன் அறிக்கை

நாளது சித்திரபானு வருஷம் ஆடி மாதம் முதல் தேதி (16-7-42) நமது "ஆனந்தபோதினி" மாதப் பத்திரிகைக்கு 28-வது ஆண்டு பிறக்கப்போகிறது. "ஆனந்தபோதினி" கால தேச வர்த்தமானத்திற் கிணங்க, வளர்ச்சி பெற்றுப் பற்பல சிறப்பியல்புகளுடன் விளங்கி வருவது நேயர்கள் அநுபவத்தில் உணர்ந்துள்ள விஷயமாகும். தமிழ் மக்கட்கு எல்லாத் துறைகளிலும் அறிவையும் முன்னேற்றத்தையும் உண்டாக்கித் தக்க வழிகாட்டியாய் விளங்குவதே "ஆனந்தபோதினி"யின் முதற்பெரு நோக்கம். 28-வது ஆண்டில் இன்னும் பல விசேஷ அம்சங்களுடன் "ஆனந்தபோதினி" உங்கட்கு மகிழ்ச்சிப்பெருக்கை அளிக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம். ஆகையால், "ஆனந்தபோதினி"யின்பால் அன்பு பூண்டு ஆதரித்துவரும் அன்பர்கள் எல்லாரும் 28-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளது சித்திரபானு வருஷம் ஆனி மாதம் 30உக் (14—7—42)குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்கும்படி செய்யவேண்டுகிறோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. அனுப்புவதால் தபால் செலவு 4 அணு மணியார்டர் கமிஷன் இரண்டணு ஆக ஆறு அணு அதிகமான—ஜாஸ்தியான செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் கால தாமதமும் ஆகும். ஆகையால் எல்லா நேயர்களும் மேற் குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்துவிடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் லாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்கு மெல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்குமேல் இருக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணு வீதம் ஸ்டாம்பு வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் 10 நாட்களுக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்கமாட்டார்கள், இந்தச் சங்கடங்களையெல்லாம் நோக்கும்போது அன்பர்கள் எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நலம்.

குறிப்பு:—முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "28—வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுத வேண்டும். புதிய சந்தாதாரர்கள் 'புதிய ஆண்டிற்கு' என்ற விவரம் எழுதவேண்டும்.

மானேஜர்.

# மகாமகோபாத்யாய சாமிநாத ஐயர்

# பிரிவாற்றாமை

---

நேரிசை யாசிரியப்பா.

மலர்தலை யுலகில் மனவிரு ளகல
அலகில் நூற்க ளன்பா யளித்தும்;
மங்கியே கிடந்த மாபெரும் நூற்களை
பொங்கிய வருளுடன் பொன்றாமற் காத்தும்;
சிந்தா மணியாதி செவ்விய மணிகளை
நந்தா வொளியுட னிலவச் செய்தும்;
தண்டமி ழன்னைக் கணிகள் சார்த்தி,
எண்ணருந் தொண்டுக ளெழிலுடன் செய்தும்;
உலையா முயற்சியு மூக்கமுங் கொண்டு,
நிலையே றொன்றை நிறுவிய பெரியோய்!
அலைகட லுலகில் அனைவரும் புகழ்ந்து,
கலைஞர் கண்ணுள் மணியாய் விளங்கி,
'கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்' என்னும்
மணிமொழிக் கொரணியாய் விளங்கி நின்ற
தகவுடைச் சாமி நாதக் கோவே
இகத்தை விட்டு பரத்திற் கேகினையோ!!
ஒப்பிலா வுன்றன் உயர்வைக் கண்டு
அப்புடைக் கடவு ளழைத்த னனோகொல்!
பண்ணார் தமிழைப் பயிலல் வேண்டி
விண்ணவர் வந்து விளித்த னரோகொல்!!
தமிழ்த்தாய் நைந்துருகத் தக்கோர் கரைந்துருக,
இமையோர் நாட்டிற் கேகினையோ எந்தாய்!!!
பல்லுயிர் மிக்க பரந்த வுலகில்
நல்லுயிர் நினதை நாடியே கவர்ந்தனன்,
நமனெனும் பாவி ஞாயமில் துரோகி!!!!
அடைக வமைதி நின்னுயிர்!
அடைக வமைதி யடைக வமைதியே!!

சாந்தி! சாந்தி!! சாந்தி:!!!

வெ. கணேசன்.

# நவ நாகரீகக் கற்பனைகள்

(மொழி பெயர்ப்பு.)

நாடு நகரங்களைப் பெருந்தீயானது பிரகாசிப்பிப்பது போல், மானிடச் சமூகங்களைப் பொதுஜனப் புரட்சிகள் ஒளிப்பிக்கின்றன.

வாழ்க்கை நதியானது சமத்துவம் என்ற பூமியின்மேல் ஓடி, சகோதரத்துவம் என்ற கரைகளால் காக்கப்பட்டு, வீரியம் என்ற காற்றினாலும் தைரியமாகிய மீகாமனாலும் முன் செலுத்தப்பட்டுச் சுதந்திரமாகிய ஆழியுடன் இறுதியில் கலக்கின்றது.

திடதேகமும், அஞ்சாநெஞ்சம், தைரியமொழியும், வீர நடையும், கம்பீரத்தோற்றமும் சுதந்திர வாழ்க்கையின் பலன்களாகும். சிந்தனை சொற்செயற்களில் பிறர் போக்கையே குருட்டுத்தனமாகப்பற்றி நடவாதவனாய், அகப்புற ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு வாய்மையும் சிரிய கருத்துக்களும்—பரோபகாரத்வமும் உடையனாய், அயலவர் புகழ்ச்சி இகழ்ச்சிகளையும்—நானாவித இன்னல் இடர்களினின்று உண்டாகும் சரீர அவதிகளையும் மனத்தளர்ச்சியையும் பொருட் படுத்தாதவனாய்த் தான் எண்ணிச் செய்யப் புகுந்த கருத்துக்களையும் காரியங்களையும் நிறைவேற்றும் திறன் உடையவனே மாந்தர்க்கு ஓர் உன்னத வழிகாட்டியாவன். உறவினர் கைவிடினும், நண்பர் அவமதிப்பினும், பகைவர் பழிப்பினும், அவைகளை லட்சியஞ் செய்யாமல், பிடரியில் படியும் பனித்துளிகளை உதறிச் செல்லும் கேசரி போலும், நூற்றுக்கணக்கான கூரிய ஈட்டிகளாலும் வாள்களாலும் நாலா பக்கங்களிலும் வீசி அடக்கப்படினும் திகிலுற்றுப் பின்னிடாது முன்னே பாய்ந்து பறக்கும் இவுளிபோலும், தன் இலட்சியங்களை நிறைவேற்றுபவனே புருஷன்.

"போர் என்பது ஓர் பெரும் சூதாட்டத்தை ஒத்ததாகும். அநித்திய வெற்றிக்களிப்பும்—தோல்வியின் சோகமும்—தந்திரச் சூழ்ச்சிகளின் ஆரவாரமும்—அகந்தையின் கொக்கரிப்பும்—இறந்தோரின் பயங்கரத் தோற்றமும்—மரிப்பவரின் மனக் கொந்தளிப்பும் தேகவேதனைகளும்—தப்பிப் பிழைத்தவரின் துர்க்கதியும் நிறைந்ததாகும் சமர்க்களம். சூதாட்டத்தில் தன் வாணாள் முழுதையும் கழித்துச் சந்தோஷித்திருக்க முடியாததுபோல், பெருஞ் சூதாட்டமாகிய யுத்தத்தில் தலையிட்டுத் தன் ஜீவகாலத்தை எச்சூரனும் கழிக்க முடியாது," எனப் போர்களைப் பழிப்பவர் பழிக்கட்டும். செருக்கும் பேராவலும் மூர்க்கத்தனமுமே போர்களின் பெரும்பான்மைக்கும் மூலக் காரணமாயினும், தர்ம ஸ்தாபனத்திற்கும் சமூக நிலைப்பிற்கும் மாந்தரின் குண வொழுக்கங்களின் தூய்மைக்கும் வன்மைக்கும், சுதந்திர வாழ்க்கைக்கும் ஆதாரமும் துணைக்கருவியுமாவது போரே யாம். சரீரத்தைத் திடப்படுத்தி, ஐம்புலன்களை ஒழுங்குபடுத்தி, மனவலிமையைப் பெருக்கி, அபாயங்களை எதிர்த்து விலக்குதற்கான விறலை யூட்டுவித்து, மூர்க்கரைத் திருத்தும், அல்லது அடக்கும் பண்புடையதாகும் போர். புறங்காட்டி ஓடி ஒளியாமையும், பார்ப்பவர் மனத்தைக் கவரத்தக்கதான கம்பீரத் தோற்றமும், எச் சந்தர்ப்பத்திலும் சலிக்காத வீரியமும், கோளரிக் கொப்பான பலமும், பெருந்தகைமையும் யுத்தங்கள் வாயிலாகத்தான் உண்டாகிச் செழிக்கின்றன. அடிமைத் தளையைத் தெறித்து உயர்த்தக் கூடிய

வர் அக் குணநிசயங்கள் பொருந்தப்பெற்ற தளகர்த்தரும் ராஜதந்திரிகளு மாம்.

அடிமைத்தனத்தையும் பரா முகத்தையும் சோம்பலையும் விருத்தி செய் யும் சமாதானம் வெறுத்துத் தள்ளற் குரியது. ஜீவான்மாவைச் சமாதான நிலை மழுக்கி மாய்த்து விடுகின்றது! மெய் வாழ்க்கை வாழ விரும்புபவன் நானாவிதப் போர்களிலும் எதிர்ப்புக்களிலும் புரட்சிகளிலும் பிரவிர்த் தித்தே தீரவேண்டும். இவ்வாறு செய்தற்கியலாதவன் அடிமையாக்கப் பட்டுத் துடிக்க நேரிடும்.

திடமனமும், வைரநெஞ்சும், வீரிய உணர்ச்சியும், கம்பீரப் போக் கும், தியாக சிந்தையும் படைத்தவர்க்குத்தான் வெற்றியும் வாழ்க்கை யின்ப மூல் உண்டாகிப் பெருகும்.

பீரங்கிச் சத்தமும், துப்பாக்கிப் புகையும் யுத்தவீரரின் கோஷமுமே தான் சுதந்திரத்தின் துணைக்கருவிக ளாகும்.

ஆபத்துக் காலங்களில் மனம் புழுங்காமை, விரோதிமுன் தலை குனி யாமை, மரணத் தருவாயில் முகவாட்ட முறாமை யாகியவைகளே தான் வீரரின் அணிகலங்க ளாகும்.

குகையில் உறங்கும் முண்டச் சந்நியாசிகளோ; உயர்ந்த மேடையிலும் தனி அறையிலும் பிரசங்கித்துப் படித்து ஆர தீர ஆலோசித்துக் கனவுல கில் தோய்ந்து திளைக்கும் பண்டிதராலோ; சுதந்திரஞ் சித்தியாகாது. ஆனால், தன் முன்னிற்குங் கடமைகளைத் தெளிந்து, தன்னம்பிக்கை—தன் னம்பிக்கைகளுடன் அவைகளைச் செய்து முடிக்கக் கூடியவராலும், இடை யூறு இடுக்கண்களால் மனச் சலிப்புறாது தைரியமாக முன் செல்பவராலுமே தான் சுதந்திரத்தின் அளவு பெருக்கப்படும்.

இருட்டிடங்களை அக்னி விளக்குதல்போல், வலிமையற்றுக் கிடக்கும் சமூகத்தையும் மக்களையும் புரட்சிகளானவை வீரம்—ஒற்றுமை—பரஸ்பர அன்பு—விசுவாசங்களால் நிரப்பி ஒளிபெறச் செய்கின்றன.

எதை ஆதரிக்கின்றோமோ அது வளர்கின்றது.

வீரதீரரைப் போற்றாத தேசமும் தேசத்தினரும் மங்கி நிலைகுலைந்து போம்.

விபத்துக்கள் வரும்போது எவன் உள்ளம் நடுங்காமல் துணிவுடன் அவற்றை அகற்ற முயற்சிக்கின்றானோ அவனே தீரனாவன்.

அச்சம் மடமையாகும். துணிவாகிய தாயையும் ஊக்கமாகிய தந்தை யையும் பெற்றுள்ளவன் ஞானியாக உயர்ந்து விளங்குவான்.

சுதந்திரத் தாகமும், சுதந்திர உணர்ச்சியும் நிரம்பப் பெற்றுள்ள ஆன் மாவைச் சிறை பயமுறுத்தாது; தண்டனைகள் ஒடுக்கி யடக்கா; உருட்டுப் புரட்டு மிரட்டல்கள் கலங்கச் செய்யா.

ஒற்றுமையில்லாது சமூக வாழ்க்கையில்லை; உயரிய நோக்கங்களும் தயாளத்வமு மில்லாது ஒற்றுமையில்லை; கற்பனா சக்தியும், சுய விசாரிப் பும், சுய முயற்சியுமில்லாது சிரிய லட்சியங்கள் எழுந்து வளர்ந்து நிலைக்கா.

அறிஞர் கற்பனைகளின் உருவமும், மக்கள் தேவை பூர்த்திக்கான சாதனமுமாவது சமூகம்.

சமூகத்தினரின் ஒத்துழைப்பினாலும், சதாகாலமும் ஆழ்ந்து விரியும் ஆதர்சங்களாலும், இடைவிடா வீர தீரச் செயற்களாலுமே தான் ஒரு சமூகம் பலம் பெற்று வளர்ந்து நிலைக்கின்றது.

மனோ பாவனையன்று, ஆனால் தீர்க்கமாக விசாரித்தறிந்து, துணிவுடன் பற்றி நடத்தலே தான் ஒருவன் குண நடத்தைகளின் உரையாணியாகின்றது.

மடமையை ஒழித்தால் தீமையாகிய புற்று தானே கரைந்து அழியும்.

அடக்கப்பட்ட எண்ணமும் வாக்கும் தடுக்கப்பட்ட வெள்ளத்தை ஒத்தவை.

நன்மை தீமைகளைத் தெளிந்து, பின்னதை விடுத்து முன்னதைக் கொண்டு உயர்தற்குச் சுதந்திரம் இன்றியமையாதது. நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து எவ்வாறு ஒன்றைக் கொண்டு, மற்றதை விலக்க வேண்டும் என்பதை உறுதியுடன் அறிதற்குக் கல்வி அவசியமாகும். இவைகளுக்குச் சமூக வாழ்க்கையும், இதற்கு ஒத்துழைப்பும் பரஸ்பர அன்பும் பொறுமையும் பிரதானமாகும்.

தொத்துப் பிராணிகளினதை ஒத்த ஜீவனத்தையும், தொழில் இழிந்ததென்ற பாவனையையும், மௌட்டிய இருளைப் போற்றுதலையும், எஞ்ஞான்றும் பச்சாத்தாபக் கடலில் மூழ்கிப் பெருமூச் செறிதலையும், கழிந்துபோனவைகளை மீட்டு மீட்டும் நினைத்து உருகிப் புலம்புதலையும், புகழ்தலையும் ஒழித்த பின் தான் சீரும் சிறப்பும் உண்டாகும்.

இவ்வுலக வாழ்க்கையைத் துச்சமெனப் பாவித்து, உலகாதிகளைப் பழித்து, பிறப்பின் முன்னும் மரணத்தின் பின்னுமான நிலைமை—நிகழ்ச்சிகளைப் பற்றி விபரீதக் கூற்றுகளைச் சாதித்து வீண் தர்க்கங்களில் இறங்கித் தத்தளித்துப் பொழுது போக்குதலையும், மாந்தருலகில் மலிந்து பெருகி நிற்கும் அசூயை—துவேஷம்-கபடம் முதலானவைகளை ஒழிக்காமல் பெருக்கியே வரும் மதக் காட்சிகளையும்-கற்பனைகளையும்—ஆசாரங்களையும் உதறித் தள்ளியபின் தான் சிறப்பு உண்டாகும். அச்ச உணர்ச்சியைப் போக்கி, ஒற்றுமை-சிரத்தை-விசுவாசம்—உடலுறுதி—திடச்சித்தம்-உழைப்பு-தாராளத்வங்களாகியவைகளை அபிவிருத்தி செய்யும் மதமும் வித்தகமுமே தான் பற்றி அறிந்து ஒழுகுதற் குரித்தானவை.

கண்ணுறப் பார்த்து விநாடிதோறும் கூடிப் பழகி வருபவரை மதியாதவன் காணவுங் கருதவுங் கூடாத ஜகதீசனை எவ்வாறு போற்றித் திருப்திப்படுத்தக்கூடும்?

“கடவுள்-பிரகிருதி-ஜீவான்மாவாகிய இம் மூன்றுக்கு முள்ள சம்பந்தத்தையும் குணத் தாரதம்மியங்களையும் தியான முறையால் உணர்ந்து, சமமும் தமமும்-அகத்தூய்மையும் பாரமார்த்திகச் சிந்தனையும் மாந்தர்க்குள் ஊடுருவிப் பாய்ந்து பதிந்து பெருகினாற்றான், நானாவித அல்லல்களினின்றும் இழிந்த பிறப்புக்களி னின்றும் விடுபட்டு அமர நிலை எய்துதற்கியலும். ஜாதி வேற்றுமைகளும் தனவான் தரித்திரன்—உயர்வு தாழ்வு-நன்மை தீமை-பாபம் புண்ணியம் என்ற வித்தியாசங்களும் ஆதியிலேயே விதிக்கப்பட்டுள்ளன. அவ்வவர் விதிப்படி ஒவ்வொருவரும் சுகியாகவும் துக்கியாகவும் பேதையனாகவும் வித்தகனாகவும் மேலோனாகவும் கீழோனாகவும் பிறந்து

வாணுளைச் செலுத்தி வருகிறான். பேராசையும்—வஞ்சகமும்—அகந்தையும்—குரூரமும் நிறைந்துள்ளது மானுடச் சுபாவம்; அவைகளை நல்லோர் கூட்டுறவினாலும், ஹிதோப தேசங்களாலும், தெய்வ பக்தியை வழிபாடுகளாலும், மதானுஷ்டானங்களாலும், புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று புனித நதிகளில் நீராடித் தூயனுதலாலும், புலச்சேஷ்டைகளை யடக்கி—மனப் போராட்டங்களைக் கட்டி—இம் மாயா பிரபஞ்சத்தையும் பிரபஞ்சாதிகளையும் வெறுத்து ஒதுக்குதலினாலுமே தான் நான் தேவனாகி ஆனந்திக்கக் கூடும். ஈஸ்வரனுக்கு நம்மீது கருணையும், நமக்கு ஈஸ்வரன் மீது பக்தியும் மத வழிக் கடைப்பிடிப்பும், சாந்தமும் ஜீவான்மாவின் உய்விற்குப் பெருஞ் சாதனங்களாவன," என்பர் ஒரு சாரார். இவைகளைப் பின்வருமாறு கண்டிப்பர் மற்றொரு சாரார்.

"வெறும் தியானத்தினாலும், ஸ்தல யாத்திரைகளாலும், புண்ணிய நதி முழுக்கினாலும், பொய்ப் புராணங்களையும், ஒரு தலை சார்பான—ஆதாரமற்ற தர்ம சாஸ்திரங்களையும் பொருளறியாது மனப்பாடஞ் செய்து ஓதுதலினாலும், தர்ம உபக்கியாசங்களாலும் மானுடனைச் செம்மைப் படுத்திச் சமூக வாழ்க்கையைப் புதுப்பித்து மாற்றிச் சிறக்கச் செய்தற் கியலாது. பொருளும் பொருத்தமுமற்ற கேவலச் சாதனைகளையும், நிஷ்பிரயோசனப் பழக்க வழக்கங்களையும் வேருடன் களைந்தெறிய வேண்டும். சதா மாறி வரும் கருத்து அல்லது இலட்சியத்தின்படிச் சமூக அமைப்பையும் போக்கையும் முடிவையும் கழித்துக் கூட்டி மாற்றிப் புதுப்பித்தாலன்றி எந்நன்மையும் உண்டாகாது."

"மானுடச் சுபாவம்" என்பது தெய்வத்தின் பிரத்தியேகச் சிருஷ்டிப் பொருட்களி லொன்றன்று; மாற்றித் திருத்தற்கியலாத, அல்லது அப்ராகிருத வழியாலே தான் திருத்தக் கூடிய அரும்பெரும் தனிக் குணநிசயமன்று. தீக்குண நடத்தைகள்—சுகதுக்கங்கள்—உயர்வு தாழ்வுகளின் பெரும்பான்மைக்கும் "மானுட சுபாவம்" என்ற கற்பிதப் பொருள் உத்தாவாதியன்று; ஆனால், சமூக வாழ்க்கையில், சுயநலத்தின் பொருட்டுச் சிற்சில நயவரால் ஏற்படுத்தப்பட்டக் கட்டுப் பாடுகளின் பலன்கள் போலும்! பொது ஜனங்களுக்குக் கல்வி அறிவு அளித்து, அகச் சக்தியையும் உரிமைகளையும் வாழ்க்கைப் பெருமையையும் அவர்களுக்கு உணர்த்தவே, தம்மை வஞ்சித்து அடக்கிய அக் நயவரை எதிர்த்து அழிக்க எழுவார்கள்; எழுந்து எதிர்த்து அழிக்கவே அப் பாதகரின் கொட்டங்கள் அடங்கும்; பின், சமூக அமைப்பும் போக்கும் யாவர்க்கும் பயன் படுமாறு அடியிலிருந்து திருத்தி மாற்றப்படவே, அவ் விபரீதங்கள் இல்லாமற் போம். எண்ணிறந்த வகுப்புக்களும், பகைமையும், செல்வமும் நல்குரவும், பேதைமையும் ஞானமும் பிரபஞ்ச சிருஷ்டி நாளில் ஆகாயத்தினின்று குதித்துப் பூமியில் பரவ வில்லை. ஓயாமல் உழைத்தும் பசி தாகங்கள் அடங்கப் பெறாது, தங்கக் குடிசையும் உடுக்கக் கந்தையு மில்லாது பெரும் பான்மையோர் வருந்துதற்கும், சிறு பான்மையோர் அவமே காலத்தைப் போக்கிச் சுகித்துக் களித்தற்கும் கடவுளும் விதியும் பொறுப்பாளிகளன்று. ஆனால் மேற் காட்டியவைகளே தான் காரணம்."

"மடிமிடிகளின் தாயான அவிவேகத்தை முறித்து, பொருட் செல்வத்தையும் கல்விச் செல்வத்தையும் நாடெங்கணும் கொழிக்கச் செய்தற்கு

வாழ்க்கைப் பற்றும், பிரகிருதி அறிவு அல்லது விஞ்ஞான சாஸ்திரம் பயிற்சி தேர்ச்சிகளுமே யல்லாது முற்றத் துறவன்று."

"கூரையில்லாக் குடிசைகள் நிரம்பி யிருக்கு மிடத்தில், மாட மாளிகைகள் எவ்வாறு உயர்ந்து நிமிர்ந்து நிற்கும்; அரை வயிற்றுக் கஞ்சிக்குத் தவிக்கும் வறிஞர் பெருகி வருகையில், மானுடப் பதர்களான 'செல்வர்' சுய சுக போகங்களில் உழன்று ரமித்து எவ்வாறு நெடுநாள் வாழ முடியும்? இவ்விழலரின் மனைகளெல்லாம் அவ் வேழைகளின் உதிரத்தாலும் தசைத்தாலும் என்புகளாலும் ஆக்கப்பட்டுள்ளனவே யல்லவா! அவ்வெளியரின் வலி வருத்த நெட்டுயிர்ப்புமே அப் "பெருமான்"களுக்கான இனிய சங்கீதம் போலும்! ஓய்வு ஒழிவுகளில்லாது உழைத்து வாடி உலர்ந்து போன அத் தீர்ப்பாக்கியர் தேகங்களின் பொடிகளே அச் "சீமான்"களின் ருசிகர—ரம்மியத்தின் பண்டங்கள் போலும்! கோடீஸ்வரரும் கள்வரும் ஒரே இனத்தைச் சேர்ந்த புல்லர்களாவர். பின்னவர் பகிரங்கமாகப் பிறரை வருத்துகிறார்கள்; முன்னவரோ வெனில், கபட கடிப்பு—போலி மதுர மொழி—கயவஞ்சகச் செயற்களால் சாதுக்களை மயக்கி வெகு துன்பத்திற்குள்ளாக்குகின்றார்கள்!"

"தேகாரோக்கியம் — மனோவமைப்பு — தொழிலேற்று இயற்றும் திறமைகளை யொட்டிய வரையிலும் மாந்தர்க்குள் ஏற்றத் தாழ்வுகள் இருக்கலாம். ஆனால், தேகபோஷணை—சரீர சுகம்—வசதி—உடுப்பு—மனப் பயிற்சிகளுக்கான உரிமைகளை ஒட்டியவரையிலும் யாதொரு பேதமுமில்லை. இவ் விஷயங்களில் பேதங் கற்பிக்கும் கொடியரைப் பலாத்காரமாக அடக்கி அகற்றுதல் சீர்திருத்தங்களு ளெல்லாம் தலையாயது.

பிரகிருதியின் அமைப்பையும் குண குணங்களையும் ஆராய்ந்து நமக்கு அநுகூலமாக உபயோகித்தலும், சமூகவாழ்க்கையின் ஆரம்பத்தையும் வளர்ச்சி முறைகளையும்—மெய்ந் நோக்கங்களையும்—மாந்தர் இயல்பையும் ஊன்றிப் பார்த்து உள்ளபடி அறிதலும், பொய்—கைதவம்—அழுக்காறு—பகைமை—போர்—கொலை களவு முதலாயினவை உண்டாகிப் பரவுதலின் காரணங்களையும் நிர்மல மனத்துடன் ஆராய்ந்தறிந்து அவைகளை நீக்குதலுமேதான் வாழ்க்கையின் மெய்ப் பிரச்னைகளாகும்; ஏனைய வெல்லாம் ஊராரை உருட்டிப் புரட்டித் திகைக்கச் செய்து கடைசியில் யாவரையும் துயரத்துள் அழுத்தற்கான ஆரவாரங்க ளாகும்.

"மானுடப் பிறப் பெய்தியவர் ஒவ்வொருவரும் தேகங் கெடா வண்ணம் அதைப் போஷித்துக் காப்பாற்றி வருதற்கான அன்னபானாதிகளையும், மனத்தின் உயர்வுக்கான கல்வியையும், அவரவர் திறனுக் கேற்ற தொழிலைக் கற்று எத்தகைய அநியாய நிபந்தனைகளாலும் அதர்மக் கட்டுப்பாடுகளாலும் ஒடுக்கி யடக்கப்படாது ஏற்றச் செய்து சுகித்து இனித்திருத்தற்கான உரிமையையும் உதவிகளையும் பெறவேண்டும். இவற்றை மறுத்தும்—எதிர்த்தும்—அடக்கியும் வரும் சட்டங்களையும் சம்பிரதாயங்களையும் அரசுகளையும் சமூகத்தையும் பூண்டோடு அழித்தல் அதர்ம மன்று.

பிரஜைகளின் மேலேற்றத்திற்கான உபாயங்களைத் தெரிவித்து அவைகளை ஒவ்வொருவரும் பின்பற்றி ஒழுக உதவும் சாதனமாம். ராஜாங்கம்—

குரூரச் சட்டங்களாலும் கொடுந் தண்டனைகளாலும் ஒறுத்து அடக்கி, அடிமை இச்சையையும்—பய வுணர்ச்சியையும்—மூடச் செருக்கையும்—இழிந்த சுய நலத்தையும்—கபட நடத்தைகளையும் அபிவிருத்திக்கும் கல்வி யையும் சூழ்ச்சிகளையும் போற்றிச் சில நூற்றுவர் பக்கம் சேர்ந்து ஏனை யோரை மனங் கொதிக்கும்படிச் செய்யும் பக்ஷபாத அரசை முறித்துத் துகளாக்குதல் முறைமையே.

சதையும் குருதியுமற்ற வெறும் என்புக் கூடுகளான சட்டங்களையும் நீதி நூற்களையும் குவித்து மக்களை நிர்ப்பயத்துடன் முன் செல்லவொட்டா மல் தடுத்துச் சுருக்கிடும் ராஜாங்க முறையை எவ்வளவு சீக்கிரமாக அகற்று கிறோமோ அவ்வளவு சீக்கிரத்தில் தைரியமும்—வாய்மையும்—அன்பும்—இணக்கமும்—க்ஷேமமும் ஓங்கி உயர்ந்து பரவி நம்மைச் சிறப்பிக்கும்.

"மனிதன் ஓர் மிருகம்; அவனைச் சீர்ப்படுத்திக் கட்டி ஆள்வதற்கு ஓர் தலைவன் பிரதானமாவன். ஒரு அல்லது பல அதிகாரிகள் மூலமாகத் தான் பொது ஜனங்களுக்குச் சகல நன்மைகளும் உண்டாகும்," என்பர் ஒரு சாரார். "கட்டி யாள்பவன் ஒருவனைத் தேடிப் பெற விரும்பி முயற் சிக்கும் மனிதனே தான் விலங்கு; மானிடக் குணநிசயம் யாதெனில், ஒரு அல்லது பல யஜமானர், அல்லது அதிகாரிகளால் கட்டி ஆளப்படா திருத் தலையாம்," என்பர் மற்றொரு சாரார். பிரகிருதியை ஒட்டியவரையிலும், பிறர்மீது சர்வாதிகாரம் அல்லது ஏகச் சக்ராதிபத்தியம் செலுத்தற்கான பிரத்தியேக உரிமையையும் திறமையையும் எவனும் பெற்றிருப்பதில்லை; அல்லது உரிமை—திறமைகளுடன் பிறப்பதில்லை. நம்முடைய ஆசாபாசங் களும் சண்டை சச்சரவுகளுமே தான் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்து அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கத் தூண்டுகின்றன. நான் ஒருவன் மேற் காட்டிய காரணத்தினால் கொடுங்கோலனாக விளங்க வேண்டுமென்ற நியதி யில்லை. சமூக வாழ்க்கையில், ஒற்றுமை வளர்ச்சிக்கும், வாழ்க்கைத் தேவை களைப் பூர்த்தியாக்குதற்கும் ராஜாங்கம் சர்வ ஜனங்களாலும் ஏற்படுத்தப் படுகின்றது. அத் தேவைகள் பூர்த்தியாகாத வரையிலும் ராஜாங்கம் நீடித்து நிற்கும். மனத்தேர்ச்சிக்கும் நற் பழக்க வழக்கங்களுக்கும் அநு கூலமாயிராத தந்தை தந்தையன்று; வியாதியை முற்றிலும் தீர்க்காது வாணாள் முழுவதும் அவதிப்படச் செய்யும் வைத்தியன் வைத்தியனன்று; இதுபோலவே, மாக்களை மக்களாக உயர்த்தாத அதிகாரி நம்பிப் போற்று தற் குரித்தான அதிகாரியன்று.

இவ்வுலக வாழ்க்கைமீது மதிப்பு அல்லது பற்றும், வீரிய உணர்ச்சி யும், வீரதீரச் செயற்களும் கீழடையவே சுதந்திரம் மடிகின்றது. சுதந்திர இழப்பினால் எண்ணிறந்த வலிவருத்த மேக்கமாகியவை பிரபலமாகின்றன. இப்பொழுது தான் அடிமை வாழ்க்கையும், தொத்துப் பிராணி ஜீவனமும் மேலடைந்து, இடம்ப மதாசாரங்களும், ஊழ்வினைப் பயன் என்ற கற்பனை யும் தேவாராதனை மும்முரிப்பும் குடிகொண்டு அனைவரையும் பலஹீனப் படுத்தித் தாழ்த்துகின்றன."

"தைரியம் தளர்ந்து, இச்சா சக்தி குன்றி, கிரியா சக்தி குறையவே, சோம்பல்—அசிரத்தை—தோல்வி யுணர்ச்சிகளின் வசப்படவே, பல பிறவி





# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 15. வியாழ உலகம்—அதன் இயலும் பலனும்

சூர்யனை நடுவாக்கி வியாழ அண்டம் அதனைச் சுற்றி ஓடும் கதியில், பூமிக்கு வட கிழக்கில்—அதாவது உதய வானுக்கும் உச்சி வானுக்கும் நடுவாக காட்சிக் குரியதாக இடம் பெறுதலின், இதற்கு அந்த திக்கின் ஆதிக்கத்தைக் கூறினர். அந்த திக்கிற்கு குபேர திக்கு—ஈசான்யம் என்று வழங்குவர். எக்காலத்தும் இதன் சுற்றுவீதி பூமியின் சுற்றுவீதிக்கு வெளிப்புறமாக—அதாவது பூமியின் சுற்று வீதியைத் தன் உட்புறமாகக் கொண்டு அமைந்திருத்தலின், நிலவுலகினுக்கு நிகழும் பலன்களுக்கு அது பொறுப்பு வாய்ந்ததென மதிக்கின்றனர். இதே விதம் செவ்வாய் உலகின் சுற்று வீதியும் அமைந்திருக்கின்ற முறைக் கண் அதற்குப் பொருள் எல்லையின் பூரண ஆதிக்கமும் முக்கிய பலனாகக் கூறினால், இந்த வியாழனுக்கு—அதாவது செவ்வாயின் சுற்று வீதியையும் தன்னுள் அடக்கி யிருக்கும் வியாழனுக்குப் பொருள் எல்லை தொட்டு காட்சிக்கும்—உணர்விற்கும் அப்பாலாய தெய்வ எல்லை மட்டும் ஆதிக்கத்தை வகுக்கலாம். இந்தப் பலன்கள், பூமிக்குக் கீழ்பால் அல்லது மேற்பால் வியாழன் வருகையில், சூர்யன் பூமிக்கும்—வியாழனுக்கும் இடை நிலையிற் சேராத காலம் மட்டும் மிக உன்னதம் கொண்டிருக்கும். இது சூரியனை ஒரு முறை வியாழன் சுற்றிவரும் பொழுதான குருவட்ட காலம்—அதாவது நிலவாண்டு பனிரெண்டில் இரு முறை குறிப்பிடத் தக்கதாகக் கூறலாம். இவ்விரண்டினும் ஒன்று பொருள் எல்லையின் சிறப்புகளுக்கும்—மற்றொன்று தெய்வ எல்லையின் உயர்வுகளுக்கும் உரியதாகத் துலங்கும். இதர பொழுதுகளில் மனமோகன எல்லையின் சாட்சி நடுவாக விருக்கும். உணர்வு நேர்மை மிக்க அடக்கம் இதன் ஜீவ நாடியாகும். இவ்வழி சலனமற்ற—திடப்பிரக்ஞையுள்ள அரசன் என மதிக்கும் நிலம்.

மனத்தின் கீழ்—மேல் ஸ்தாயிகளின் ஆதிக்கம் கொண்டது. இவை யாவினும் அறிவு எல்லையே ஆதாரவாதலின், புத்தி பாகச் சிறப்புகளுக் குரியதாய்க் கூறுவர். இவ்விதம், எல்லைகள் யாவினும் நடு வினையுடைய சம்பர்களைப் பற்றிய கோட்களும் நம்பிக்கையும், மதக்கட்சிகளும் பரஸ்பர முரண்பாடும் வைரப்பகையும், தத்துவ வகுப்புக்களும் செழிக்கின்றன.

"ஒருவனுடைய பெருமை—சிறுமைகளுக்கு மூல காரணமாவன அவனுடைய குண வொழுக்கங்களே யல்லாமல் குடிப்பிறப்பன்று. பிறப்பை யொட்டிய வரையிலும், சகல உடைமை உரிமைகளையும் அனைவரும் சமமாகப் பெற்று அனுபவித்தற்குத் தகுதியுடையராவர்."

தங்களைக் கொண்டிருத்தலின், அறிவது அறிவு என்னும் அளப்பரிய பெற்றியை முக்கிய மாக்கி—அதன் பலன் நல்கும் அருள் நிலையை இதற்கு 'பல பாகம்' சிறப்பாகக் கற்பிக்கின்றது. இவ் வழி நேர்மை நிறைந்த உயர் நெறி—பரிசுத்த விருத்தி-அமைதி நிலவிய உபசாந்தம் குருவின் பலன்களாகும். ஜ்யோதிஷ பல பாகம் இதனை தெய்வம்—அரசன்—பொன்னவன்—திவ்ய தேசு—அருட் சக்தி என்றது.

ஜீவ நிலைக்குரிய—அதாவது ஜீவ நிலையின் ஒரு முதல் ஊற்றென இயல்பின் இயங்குவது வியாழன். அதில் அடங்கியுள்ள—அதி தீக்ஷண்யம் வாய்ந்த முன்-பின் சத்துக்கள் ஒரு நிர்ணயமான அளவைக்குள் அடங்கினவன்று. எனினும் தோற்றங்கட் காதாரவான வரை (எல்லை) யாகவும்—ஒடுக்கத்தின் விளைவான உபசாந்த எழில் நிலையமாகவும் இவ் வழி எல்லா முனைகளுக்கும் நடுவாய்—அவற்றின் நாயகமாய் அல்லது தாயகமாய் இருத்தலின், தோற்ற எல்லையின் முதற் கோட்டத்து பிரமமாய்—அதாவது சிருஷ்டி ஆதிக்க முதலாய்க் கூறலாம். எனவே, எல்லா எல்லைகளிலும் ஆக்கத்தின் சோபைக்கு அருளாய் இருத்தலின், உற்பத்தி சக்தி நிறைந்த ஆண் என்றனர். இதன் உற்பத்தி சக்தியை (Power of Production) அல்லது அதன் அருளை புத்திர காரகன் என்று கூறினர். பலவாய்த் தோன்றும் யாவினுக்கு ஒரு முதல் ஊற்றாயிருத்தலின், ஆணி பலவாய் ஆவதற்குரிய பொன் எனச் சொல்லினர். வண்ணமற்ற—ஆனால் வண்ணங்கள் யாவினுக்கும் தாயகமா யிருத்தலின், பொன்வண்ணம் என்று கற்பித்தனர். குணங்களில் சத்துவமே பிரதானமாகக் கொண்டது. பொருள் எல்லையில் அரசனாய்—மனமோகன எல்லையில் இருள் கழிக்கும் குருவாய்-உணர்வு எல்லையில் அமைதிதரும் திடஞானமாய்—உபசாந்த பூமியில் எழில் தெய்வ அருள் நிலையாய் வியாழ அண்டத்தின் பலனாக விரித்திருக்கின்றனர் அறிஞர்.

இவ்வழி, பொன்—பொருள்—பொக்கிஷங்களும், ஆசிரியன்—உபதேசகன்—மந்திரி—ஆலோசகன்—நெறி காட்டுவோன் என்ற நிலைகளும்—அறிவுக்கு விருந்தாய் மிளிரும் அளவின் கலைகளும்—குருவின் பலன்களாக வரும். இவையெல்லாம் அண்ட வானின் எல்லை முதலிய விவரங்களுள் அடங்கும். இனி, பிண்ட வானின் எல்லை முதலியவற்றும் காணும் பலன்களிற் குறிப்பிடத்தக்க ஒன்று அல்லது இரண்டு மட்டும் இங்கு கூறுவோம்.

அறிவின் விகாசங்களுக் குரிய வியாழன் சோம—சூரிய மண்டலங்களின் தாயகமான அக்னி மண்டலத்தின் நடு மூலமாக இடம்பெற்று—யாவினுக்கும் ஜீவனாக மிளிருகின்றது. சுவாதிஷ்டானம்—மணிபூரகம் ஆகிய சக்கரங்களின் இட நிலை விளக்காக இருக்கின்றது. மேல்—கீழ்—நடு மூலங்களின் வான் கூறின் ஜீவ அரணாக உடற் கூறில் ஜீவ நாடியாகவுள்ள வாதமும்—உள் அங்கங்களில் ஆமாசயமும் (வயிறு)—கலை மூன்றினும் சுடரின் திவ்ய தேசுமாக இதன் ஆதிக்கத்தைக் கூறுவர்.

## ஜ்யோதிஷ பல்பாகம்

இத்தகைய குரு கிரகத்திற்கு ஜ்யோதிஷ பல பாகம் வகுத்துவைத்திருக்கும் விவரம் காணுவோம்.—வான் கூறு மிகுந்த வியாழன்

ஈசான்ய திக்கு பலம் கொண்டது. பொன் வண்ணத்து திவ்ய தேச நிறைந்தது. சத்துவகுணப் பிரதானங் கொண்டதாய் அறிவது அறியும் பெற்றிக்கு வழி நடத்தும் ஒரு ஆசிரியனாய் இலங்குவது. இவ்வகையில், இனிமையான சோபை—மதிக்கத்தக்க தோற்றம்—மறுக்க முடியாத செல்வாக்கு—உயர்தரமான எண்ணங்கள்—நேர்மை மிக்க மந்திராலோசனை—மூன்று காலங்களையும் அறியும் சக்தி—பரிசீலனை—தீர்ப்பு—கற்பித்தல்—கற்றல்—நீதி—நியாயம்—அறிவுக் கலை—உபதேசம்—பரிசுத்தம் — உற்பத்தி நலம்—அடக்கம்—பொறுமை — அளவற்ற மனோசக்தி — உண்மையான திடஞானம் ஆகியன குருவின் இயற் பலன்களாகும். இவ் இயலில் தலைவன்—ஆசிரியன்—நியாயஞ் செய்வோன் (நீதிபதி) மந்திரி—பொக்கிஷதாரன்—உண்மை காணுவதற்கு விடாத போரை மேற்கொள்ளும் மாவீரன்—கலை வல்லோன்—உரையாளன்—நூலாசிரியன் என்று வரும் நிலைகளுக் குரியது வியாழன்.

தீர்மானம்—முடிவு—ஆக்ஞை—இவற்றையே தன் சிறப்பியல்களாகக் கொண்ட வியாழன் அரசியல்—சமூகம்—பொருளாதாரம்—நிர்வாகம் ஆகிய துறைகளில் விசேஷமான செல்வாக்குகளை நல்கும். தீர்க்க திருஷ்டி—திடஞானம் இவை வியாழனின் தனி இயல்களாதலின், உலகனைத்தும் தலை வணங்கும் பெற்றியும்—ஞான உபதேசமும் இதன் பலன்களாக விருக்கும். உற்பத்தி இதன் பொது வியலாகலின், முதனூல் விரித்தல்—அதாவது சுதர்மமாக எதையும் ஆளும் திறமைவழி நூல் இயற்றல்—பொருள் உரைத்தல்—ஆகிய வெளியீடுகள் தருமமார்க்கப் பிரவேசத்தால் உலகினரின் மதிப்பு கௌரவத்தைப் பெறுதல்—நல்ல சங்கம்—உயர்தரத்து நேயர்கள்—கிரியாம்சையில் வெற்றிக்குரிய முயற்சிகள்—பரிசுத்த உள்ளம் ஆகியன வியாழனின் பொதுவான பலன்களாகும். இந்தப் பலன்கள் உடையவரை சுதர்மமான மனிதர் என்பர். உற்பத்தி முதலாக விருத்தலின், வியாழனை புத்திர காரகன் என்றனர். பொக்கிஷ ஆதிக்க மிருத்தலின் திரவிய காரகன் என்றனர்.

இவ்விதம் பலன்களில் உயர்ந்த வியாழன் பலன் நிகழ்த்துவதில் சற்று நிதானங் கொண்டதாகவே துலங்கும்—அதாவது பல வித்திகளின் அளவை வெகு நிதானங் கொண்டிருக்கும். இதன் தனித்த சுபாவமான பலன்களுடன்—சேர்க்கைகளில் சேர்ந்த கோள்களின் இயல்புங்கூடி சிறக்கவும் கூடும். இனி, இதன் விசேஷ பலன்களுக் குரிய இடங்களை வாளத்தே காணுவோம்.



# தமிழ் நூல் ஒன்று

(கு ந.)

வாழ்க்கையை நலவழிபெற நடத்தி வருவோர் வெற்றி பெறுவர். வாழும் முறையை உணர்ந்து அதற்கேற்ப நடக்குமாறு நம்மை ஊக்குவன நீதி நூல்கள். கட்டுப்பாடு கொண்டு நடக்கின்ற மக்கள் தாம் உயர்வடைதல் இயலும். மக்கள் தொகுதியினர் தமக்குள் கட்டுப்பாடு உண்டாக்கிக் கொள்வதற்காகவே நீதி நூல்களைத் தோற்றுவித்தனர். உலகில் நீதியினை எடுத்தியம்பும் நூல்கள் எண்ணிறந்தன. அவற்றுள், தலையாயது மாண்புபெறு திருக்குறளே என்பது அறிஞர் ஒப்பமுடிந்த கொள்கையாகும். அந்த நூல் அளவில் சிறியது; மாண்பிற்பெரியது. அதன் பெருமைகள் உள்ளுதற் கரியன; விள்ளுதற்கும் அரியன. அப் பெருநூலால் பயனடைந்தோர் பலர்; அதன் பெருமை கண்டு தமிழ் மொழிபால் விருப்புற்றோர் பலர்.

தமிழ் மொழிக்கு வைப்பு நிதி போன்றன பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்பன. இலக்கணத் துறையில் வேறு நூல்கள் உள. தமிழ் மொழிக்குப் பெருமை நல்கும் இப் பல நூல்களுள் 'திரு' என்னும் அடை பெற்ற நூல்கள் இரண்டே. அவை திருக்குறளும், திருமுருகாற்றுப் படையுமாம். பல நூல்களிடை இரண்டு சிறந்து விளங்க அவ் விரண்டனுள் ஒன்றாய் விளங்கும் திருக்குறள் எத்துணை மாண்புடைத்து!

நீதி நூல்களுள் சிறந்து நிற்பது திருக்குறளே. நீதிக்கு, உயர்ந்தவனென்றும் தாழ்ந்தவனென்றும் நோக்கும் இரு நோக்கு இல்லை. குற்றம் புரிந்தவன் யாவனேயாயினும் அம் மகனை ஒறுத்தல் வேண்டும். இவ் வொரு சிறந்த நிலையே நீதி நூற்களின் உயிர் நிலை. இஃதின்றேல் நீதி பல எடுத்துரைக்கினும் இவ் வொரு குறைபாட்டான் மற்றைய நூல்கள் தள்ளப்படுவனவே. இக் கண்கொண்டு நோக்குவார்க்குத் திருக்குறளின் தனிச்சிறப்பு தோன்றத் தடையில்லை. 'மனு' முதலிய 'நீதி நூல்களில்' குலம் உயர உயர ஒறுத்தல் இன்மையும், குடி தாழத் தாழ ஒறுத்தல் மிகுவதும் காணப் படுகின்றனவே! அவைகள் நடுவு நிலைமையாளர்க்கு நீதி நூல்களாகத் தென்படமாட்டா. இப்பேருண்மையை உணர்ந்த ஆசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள்,

> "வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி"

எனக் கூறிப் போந்தமை கண்டு உணர்தற் குரித்து.

தமிழர்கள் பொது நோக்குக் கொள்கையிற் றலை சிறந்தவர்கள். தாங்கள் எக் கொள்கை யுடையராயினும் பிற கொள்கை யுடையவர்களை எக்காலத்தும் தூற்ற மாட்டார்கள். தங்கட்கு எவ்வாறு ஒரு வழி சிறந்ததெனத் தோன்றிற்றோ அவ்வாறே பிறர்க்கும் மற்றோராறு சிறந்ததாகக் காணப்படலாம். ஆகவே, ஒருவரை மற்றொருவர் தூற்றுவதற்கு இடமில்லை. இக் கருத்துடைமையினால் தான் ஆசிரியர் பூங்குன்றனார் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனக் கூறினர். ஆசிரியர் திருவள்ளுவர் உலகுக்

செல்லாம் செல்ல வேண்டிய நீதி நூலொன்றனைச் செய்யப் புகுந்தனர். பல திறப்பட்ட சமயங்களும் கொண்ட வெவ்வேறு பகுப்பினரும் பின்பற்ற வேண்டியது ஒரே வகைப்பட்ட நீதியாகும். எல்லாச் சமயத்தினரும் முடிவாகக் கொண்டிருத்தல் ஓர் உண்மையே. இக் கொள்கைக ளெல்லாம் பொருந்த அமைத்தாலன்றி உலகினர் யாவரும் ஒரு நூலைப் பொது நூலென ஏற்றுக் கொள்ளார்கள். ஆகவே தான், பொய்யா நாவின் புலவரே ரான நம் வள்ளுவர் பொது நோக்குடையராய்,

> ‘அகர முதல வெழுத்தெல்லா மாதி
> பகவன் முதற்றே யுலகு’

எனப் பொதுப்படக் கடவுள் வாழ்த்துக் கூறினார். இப் பொது நோக்கிருப்பின் இன்றைய உலகில் போரேது, பிணக்கேது? இன்றைக்கு எண்ணும் இப் பொது நோக்குணர்வை எத்தனையோ ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே உணர்ந்து பறைசாற்றிய திருக்குறளின் மாண்பு எத்தகைத்து!

திருக்குறளுக்குப் பிற்பட்ட இலக்கியங்களுள் எதனை எடுத்தாலும் அதனுள் திருக்குறட் கருத்துக்கள் ஆங்காங்கே அமைக்கப் பெற்றிருக்கின்றமையைக் காணுகின்றோம். கம்பர், வில்லிபுத்தூரார் முதலாய எல்லா ஆசிரியர்களும் திருக்குறளின் பொருளே யன்றி அதன் மொழிகளையும் பொன்னே போற் போற்றுகின்றனராயின் அந் நூலின் பெருமை அளவிடற் பாலதாமோ! இன்றைய கல்லூரி மாணவர்களைப் பிற இலக்கியங்களில் வினாக்கள் வினவுங்கால் குறட் கருத்தமைந்த பாடல்களைப் பற்றிப் பல வினாக்கள் கேட்கப்படுவதும் இக் குறளின் அருமை பெருமைகளைப் புலப்படுத்துவதாகும்.

தமிழ் மொழியிலக்கணத்தில் ‘காரண விடுகுறிப் பெயர்’ என ஒரு பெயர்ச் சொல்லுண்டு. காரணங் கருதிய வழி பல பொருட்குப் பொதுவாகின்ற சொல் ஒன்று பொதுவாக எப்போதும் ஏதோ ஒரே ஒரு பொருளை உணர்த்த வருமாயின் அச்சொல்லைக் காரண விடுகுறி யெனக் கூறுவர். அவ் விதிக்கேற்ப ‘குறள்’ என்று கூறியவுடனேயே ‘வள்ளுவர் செய்திருக் குற’ளையே நாம் நினைக்கின்றோம். ‘குறள்’ எனும் சொல் குறள் வெண்பா எனும் பொருளுடைத்தாயினும் நாம் எண்ணுவது திருக்குறளைப் பற்றித் தான். இவ்வாற்றானும் திருக்குறள் மாண்பு வெளிப்படும்.

திருக்குறளைப் பயிலுவோர் எத்தேயத்தே தோன்றி எவ்வாற்றான் வாழினும் அவர்கள் தங்களைத் தமிழ்மொழிக் குரியவர்களாகக் கூறிக் கொள்ள விரும்புவர். அத்தகைய ஈர்ப்பு ஆற்றல் அந் நூலகத்தே உண்டு. அந்த ஆற்றலால் இழுக்கப் பட்டமையானன்றோ ஆங்கிலப் பாதிரியாரான போப்பையர் தம் நடுகல்லில் ‘தமிழ் மாணவன்’ எனக் குறிப்பிடச் சொன்னார்! அம் மட்டோடன்றி அப் பெரியார் எப்போதும் தம் மேலங்கியில் திருக்குறட் புத்தகத்தை வைத்துக் கொண்டிருந்தா ரென்றால் திருக்குறளின் பெருமை தானே தோன்று மன்றோ?

பேரரசி விக்டோரியா அம்மையார் ஆங்கில அரசின் தலைமையாளரா யிருந்தோர். அவ் வம்மையாரின் நூல் நிலையத்தே அவர்களுடைய சமயம்

புத்தகத்தை யடுத்து நம் திருக்குறளை அமைத்திருந்தனராம். இதனால் நம் குறள் மாண்புணர்ந்த பெரியோர் பலரென்பது தெளியப்படும்.

ஆசிரியர் வள்ளுவரின் பெருமை யுணர்ந்த உணர்ச்சிக் கவியாய பாரதியார்,

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' எனக் கூறிப் போந்தனர். திருவள்ளுவரை உலகுக் கீந்தமையால் தமிழ் நாட்டுக்குப் பெருமை வந்தது என்பது உட்கிடக்கை. எனின் என்னே அவர் தம் நூலின் பெருமை!

உலகில் தலை சிறந்து விளங்கும் மொழிகள் பலவற்றினும் நம் இனிய குறள் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. ஆங்கிலம் பிரெஞ்சு, இலத்தீன், ஜெர்மன் முதலியன அப் பெருமைபெற்ற மொழிகளுள் ஒரு சில.

திருக்குறள் என்னும் கடலின் ஒரு பகுதியையேனும் நன்குணராதார் 'திருக்குறளில் வீடு கூறப் பெறவில்லை; அறம், பொருள், இன்பம் எனும் மூன்றே கூறப் பெற்றன' என்பர். 'வீடு' என்பது யாது? இவ்வுலக வாழ்க்கையைச் செம்மையுற நடத்தினுர்க்குக் கிடைக்கும் பேறன்றோ அது? ஆகவே, உலக வாழ்வினிடையே தான் வீடு பெறுவதும் பெறாததும் பிணைந்து கிடக்கின்றன. இம்மையில் வீடு காணுன் அம்மையில் எவ்வாறு காண்பான்? 'அறம் புரிய வேண்டும்' எனில் வீட்டை நோக்கமாகக் கொண்டன்றோ ஆசிரியர் கூறுவர்! வீட்டைப் பற்றிக் குறளில் கூறப்பட்டிருப்பதை அறிஞர்கள் சின்னாட்களுக்கு முன்னர்ப் பத்திரிகைகளின் வாயிலாக நன்கு விளக்கி விட்டனர். ஆகவே, குறளின் பெருமை மீண்டும் மிகுந்து மக்களால் உணரப்பட்டு வருகின்றது.

பெரியார் யார்? இக் கேள்விக்கு விடையாக ஆங்கிலத்தில் நியூமென் (New Man) என்பார் நீண்டதொரு கட்டுரை வரைந்துள்ளார். அக் கட்டுரையை உலகினர் யாவரும் போற்றுகின்றனர். நம் ஆசிரியர் நீண்ட சொற்களில் எப்போதும் நம்பிக்கை வைக்காதவர். 'கடுகைத் துளைத்து (அதனுள்) எழுகடலைப் புகுத்திக் குறுகத் தரித்த குறளை' எழுதிய நம் வள்ளுவர் ஒரு பாட்டின் ஒரு பகுதியிலேயே இவ் வினுவிற்கு விடை யளிக்கின்ருர். பெருமையுடையவர்கள் பெரியவர்களென்பது எல்லோருக்கும் தெரியும். அப் பெருமை என்ன என்பதைக் கூறிவிடின் 'பெரியார் யார்' என்பது தானே பெறப்படும். அதற்கேற்பப் 'பொய்யில் புலவர் பெருமையின் இலக்கணம் கூறுகின்ருர். அவர் கூறுவது 'பெருமை பெருமித மின்மை' என்பது. எவ்வளவு குறுகிய அளவில் கூறுகின்ருர் என்பது நோக்கத்தக்கது. மூன்று சொற்களில் பெரியார் யாரெனக் கூறி விட்டார். 'பெருமிதமில்லாமை பெருமை; பெருமையுடையோர் பெரியோர்' என விரித்துக் கொள்ள வேண்டியது தான் நம் வேலை. சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் போற்றல் ஈண்டு நன்கு வெளிப்படுகின்றதல்லவா? பெரியார் யாரெனக் கூறியதோ டமையாது அக் குறளிலேயே சிறுமையுடையோர் எத்தகைய ரென்பதையும் கூறி விடுகிருர், 'சிறுமை, பெருமிதம் ஊர்ந்துவிடல்' என்பது பொய்யாமொழி. இவ்வளவு குறுகிய அளவில் சிறந்த

கருத்துக்களைத் தெளிவுறக் கூறும் ஆற்றல் எம்மொழியிலும் எப் பேரா சிரியர்களும் காணாத புதுமை.

'சாக்ரெடீஸ்' என்னும் பேரறிஞர் மிக்க நூல்களைப் படித்து பல துறையிலும் அறிவு பெற்ற பெரியார். அவர் எல்லாம் படித்துக் கூட, 'எல்லாம் படித்தும் நான் கண்டது இன்னும் ஒன்றும் தெரியாமையே' என்று கூறினரெனப் பலரும் அதனைக் கூறிக் கூறி மகிழ்கின்றனர். வள்ளுவனார்க்கு அஃது ஒரு வகையான புதுமையையும் தரவில்லை. இக் கருத்தை நம் ஆசிரியர் ஒரு குறளில் உவமையாக எடுத்தாளுகின்றார். அறிதோறறியாமை கண்டற்றால்' என 'அறியுந்தொறும் அறியுந்தொறும் அறியாமையின் எல்லை விரியும்' எனும் கருத்தை ஓர் உவமையாகக் கூறுகின்றார். வள்ளுவர் கொள்ளும் கருத்தை உணரின் நம் நாட்டினர்க்குப் பிறர் கருத்துப் புதுமையாகத் தோற்றாதன்றோ !

திருக்குறளின் பெருமை விரிக்க விரிக்க விரியும் தன்மையுடைத்து. ஆசிரியர் திருவள்ளுவர்,

> 'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
> பண்புடை யாளர் தொடர்பு'

எனக் கூறியுள்ளார். நல்லோரிடம் கொள்ளும் நட்பின் மாண்பு பழகப் பழகத் தெரியுமாம். எதைப் போல எனில் ஒரு நூலை எவ்வளவுக் கெவ்வளவு பயில்கின்றோமோ அவ்வளவுக் கவ்வளவு அந் நூலின் நயம் தோன்றுவது போல. இக் குறளில் ஒன்றனை மற்றொன்றுக்கு உவமையாகக் காட்டினர். நாம் அவ் விரண்டனையும் திருக்குறளுக்கும், திருவள்ளுவர்க்கும் முறையே உவமைகளாகக் கொண்டு நோக்குவமாயின் திருக்குறளின் நயமும் வள்ளுவர் உளப்பாங்கும் தெளியப் பெறுவோம். அச் சிறு பெரிய நூலைப் படித்துப் படித்து நினைத்து நினைத்து வருவோமாயின் அதன் மாண்பும் வெளிப் பட்டுக்கொண்டே யிருக்கும். அவர் கூறிய இலக்கண விதியாய 'நவில் தொறும் நூல் நயம்' என்பதற்கு அவருடைய நூலொன்றே தலை சிறந்த இலக்கியம். அதை அறியுந்தொறும் அறியுந்தொறும் அறியாமையின் எல்லை காணப்பெறும். 'அறிதோறறியாமை கண்டற்று' என்பது பொய்யா மொழியன்றோ ? திருக்குறளுக்கு உவமையாக வேறொரு நூலும் கிடையாது. அதற்கு இணை அதுவே !



# தளவாய் அரியநாத முதலியார்

(தி. முத்துராம கிருஷ்ணன்.)

ஆண்டவன் உண்டாக்கிய இவ்வுலகத்திலே இன்றைய துன்பம் நாளை இன்பமாகி மறுநாள் அது கனவாகி விடுகிறது என்று ஒரு மகான் சொல்கிறார். ஆகவே, உலகம் மாறிச் மாறி சுழன்று கொண்டிருப்பதையே அதன் வேலையாக வைத்திருக்கிறது. என்ற போதிலும் இந்த மண்ணுலகத்திலே தர்மம் குன்றி அதர்மம் ஓங்கும் காலத்தில் நான் வந்து அவதரிக்கிறேன் என்று கிருஷ்ணபகவான் சொல்கிறார். இதற்குச் சான்றாக சரித்திரத்தைப் புரட்டிப் பார்ப்போமானால் எத்தனையோ மகான்கள் தக்க சமயத்தில் நம் பாரத கண்டத்தில் அவதரித்திருக்கிறார்கள். அவர்களும் ஆண்டவன் மூலமாகத்தானே அனுப்பபட்டிருக்க வேண்டும்.

ஒவ்வொரு மகானும் ஒவ்வொரு கொள்கையையே பரப்பிப் போயிருக்கிறார்கள். கடவுள் ஒருவரே என்ற விஷயத்தில் எல்லோரும் ஒரே கொள்கையை அநுஷ்டித்திருக்கிறார்கள். எது எவ்வாறிருந்த போதிலும் அவர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும் மற்றும் அம் மகான்களுடைய உபதேசங்களையும் அறியவேண்டியது நம் பகுத்தறிவுக்கேற்ற கடமை யாகும். ஏனென்றால் “மாந்தர்க்குரிய கல்வி மானிடரைப்பற்றி கற்றலே” என்று பெயர்பெற்ற ‘போப்’ என்னும் ஆங்கிலேயக் கவிஞர் கூறியுள்ளார்.

ஒருவன் வாழ்வில் உயர்வு பெற வேண்டுமெனினும் நாட்டுக்கு நற்றொண்டு செய்யவேண்டும் எனினும், அவன் சிறந்த பெரியோருடைய வாழ்க்கை வரலாறுகளை நன்கு அறிதல் வேண்டும். நாம் வாழ்க்கையில் சிறிது தளர்வடையும் சமயம் அன்னாரது வாழ்க்கைச் சரிதமெல்லாம் தளர்ந்துழி ஊன்றுகோலைப்போல் உதவி நம்மை ஊக்கிவரும். அவர்கள் சென்ற வழியில் நாமும் முன்னேறலாம் அல்லது அவர்கள் செய்த தொண்டுகளை உணர்ந்து நாமும் அதன்படி நடக்கலாம். ஆகவே, பெரியோர்களுடைய வாழ்க்கை வரலாறுகளை அறியவேண்டியது மிக மிக அத்யாவசியம். எனவே, தம் கூரிய மதியாலும் தேசபக்தியாலும் நாட்டுக்கு பல நன்மைகள் செய்து தேசத்தில் அமைதியை நிலவிய பெரியாராகிய தளவாய் அறியநாத முதலியாரைப்பற்றி தெரிந்துகொள்வது சிறந்ததே.

“பொன் எயிற் காஞ்சி” என்றும், “தேவர் கோமான் காவல் மாநகர் மண்மிசைக் கிடந்தென, வளம் தலைமயங்கிய பொன்னகர்” என்றும் மணிமேகலையில் வருணித்திருப்பது, 2000 ஆண்டுகளுக்கு முன்னரே, சோழ ராஜதானிகளில் ஒன்றாகக் காஞ்சிமா நகரம் பலவளம் செறிந்து விளங்கினமைக்குச் சான்றாகும். இத்தகைய புகழ்வாய்ந்த காஞ்சிபுரத்தினருகே மெய்ப்பேடு என்னும் ஊரிலே, சுமார் 430 ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தவர் நம் கதாநாயகரான அரியநாயக முதலியார். இவரை அரியநாதரென்றும் கூறுவர். இவர் தொண்டைமண்டலச் சைவவேளாளர் மரபைச் சேர்ந்தவர் என்று தெரிகிறது. சுதேச மன்னர்களின் ஆட்சியிலே அமைச்சராயும் தளகர்த்தராயும் பணிபூண்டு, கோட்டை கொத்தளத் தலைமையும் இராச மரியாதை விருதுகளும் பெற்று, தொண்டைமண்டல வேளாளர்களில் 24 குடும்பத்தார்கள் வாழ்ந்து வந்தனரென்றும், அந்தக் குடும்பங்களுள்

ஒன்றில் இவர் பிறந்தனர் என்றும் கூறுவர். என்ற போதிலும் இவர் பிறக்கும்போது மிகவும் தரித்திர நாராயணராகப் பிறந்து அதிக புக ழுடையவராக விளங்கினர் என்பது உறுதியே. இவர் கி. பி. 1495-க்கு முன்பே பிறந்து, 1595-க்கு பிறகே இறந்தாரென்றால் நமக்கு ஆச்சரியமும் அடங்காச்சிரிப்பும் தோன்றுகிற தல்லவா!

பால்யனு யிருக்கும்பொழுது ஒருநாள் இவர் தாயார் இவரை பாயிற் கிடத்திவிட்டு தண்ணீர் கொண்டு வரப்போயினள். அவர் தண்ணீர் கொ ண்டு வரும்பொழுது ஒரு பெரிய நாகம் இவரைச் சூழ்ந்து வளைந்து பட மெடுத்து நின்றதைப் பார்த்தாள். பார்த்ததுதான் தாமதம். ஓ என்று கூச்ச லிட்டு பானையை கீழே போட்டாள். அது சுக்கு நூறாக நொறுங்கியது. மனம் பதை பதைத்தாள். என்ன செய்வதென்று தெரியாமல் திகி லுற்றாள். ஆனால் தெய்வ கிருபையால் பாம்பு படம் காட்டிவிட்டுப் போய்விட்டது. இச் செய்தியைக் கேட்ட பெரியோர் இக் குழந்தை உலக வாழ்க்கை யிலே பெருஞ் சிறப்புற்று ஜோதியாய் விளங்குவானென்று கூறினராம். பிறகு குழந்தை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக தக்க கல்வியுடன் வளர்ந்து வந்தது. சிறு குழந்தையிலேயே அரியநாதர் புத்தி கூர்மை படைத்திருந்தார். பின் வர வர கணித சாஸ்திரத்தில் கரைகண்டு விட்டார். படிப்பில் மாத்திரம்தானு நிபுணரென்றால், கிடாத்திரத்திலும் சிலம்ப விளையாட்டுகளிலும் இவரை யாரும் மிஞ்ச முடியாமல் விளங்கினர். பிறகு சொல்லவாவேண்டும் இவருடைய ஜாதகபலனை?

இவர், ஒருநாள், தன் சிநேகிதர்களுடன் உல்லாசமாக விளையாடிக் கொண்டிருக்கையில் ஓர் பிராமண ஜோதிடர் இவர் சிலம்பம் விளையாடும் திறமையைப் பார்த்து, அப்படியே கல்லுச்சாமிபோல் நின்று அதிசயமாய் அந்த அற்புதக்காட்சியை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தார். பிறகு அரியநாதரை அண்டி, எங்கே உன் கையின் ரேகைகளைப் பார்ப்போம் என் றார். அரியநாதர் மிகவும் பணிவாக தனது கையைக் காட்டினர். பிரா மண ஜோதிடர் ரேகைகளைக் கவனித்து அரிய நாதரை, "நீ உடனே மகா ராஜாதிராஜ பரமேசுரரான ராயலுவின் சமஸ்தானத்தைப் போய்ச் சேர். உன் வறுமையை பொறுத்துக் கொண்டாவது நீ விஜயநகரம் போய்ச்சே ர"ன்றார். அரியநாதர் சிறிது புன்முறுவலுடன் "சுவாமி, நானாவது, விஜய நகரம் போவதாவது. தம்பிடி கையில் கிடையாதே சுவாமி." என்று கூறி னர். "என்னமோ நீ போனால் மகாராஜாதி ராஜனாக சோபிப்பாய். அந் தக் காலத்தில் உன் ஞாபகம் இருக்கணுமே" என்றார் ஜோதிடர். அதற்கு அரியநாதர், "சுவாமி தாங்கள் சந்தேகிப்பது நியாயந்தான்.

"அறன்கிரம்பிய அருளுடைய அருந்தவர்க் கேனும்
பெறல்அருர் திருப்பெற்றபின் சிந்தனை பிறிதாம்."

என்று கவிச் சக்கரவர்த்தி கூறி யிருக்கிறார். பெரியோர் சுபாவமே அப் படி யிருக்க, என்னைப் போன்ற ஒரு சாமானியச் சிறுவனைப்பற்றித் தாங் கள் சந்தேகிப்பது சகஜந்தானே. ஆனால் நீங்கள் சொல்கிறபடி செல்வ னானால் என் சொத்தில் கால்வாசித் தரத் தயார்" என்றார் அரியநாதர்.

பிராமணர்:—செல்வனு, ராஜயோக மென்கிறேனே; சரி இதெல்லாம் எதற்கு? ஒரு சீட்டில் உன் கைச் சாத்திட்டு அவ்வண்ணம் எழுதிக்கொடு என்ருர்.

உடனே அரியநாதரும் தன் கைச்சாத்திட்டு அன்று நடந்த விஷயங்களைப் பூராவும் எழுதிக் கொடுத்தார்.

ஒரு வாலிபன்:—சாமியின் விலாச மென்னவோ!

பிராமணன்:—என் விலாச மெதற்கு? பின்ஞல் நாளுவது என் மகனுவது இந்தச் சீட்டைக் கொடுத்தால் அதற்குரிய வெகுமதியைக் கொடுக்க வேண்டியது அவரது கடமை யாகும்.

வாலிபன்:—ஒஹோ. ஜோஸ்யம் பொய்யாய்ப்போனுல் கேலி பண்ணுவார்கள் என்ற பயம் போலிருக்கிறது.

பிராமணர்:—உம். பின்னுல் பாருங்களேன்; இந்த ஏழைப் பிராமணனின் வாக்கை. இவர் சொன்னுல் சொன்னதுதான். என்று கூறிச் சென்ருர்.

பின் அங்கு கூடி யிருந்த சிநேகிதர்கள் அரியநாதரை "மகா ராஜாதி ராஜன்" என்று கேலி பண்ணத் தொடங்கினுர்கள். உடனே ஒவ்வொருவரும் மந்திரி வேலைக்கு வேட்டையாடத் தொடங்கி விட்டார்கள்.

தன் செல்வத்தாய் தந்தையர்களின் உத்தரவை பெறுவதற்குள் அவர் பட்ட கஷ்டங்கள் சொல்ல முடியாது. கடைசியாகப் பயணத்தை ஆரம்பித்தார். இவர் புறப்படும் தருவாயில் 'வால் நீண்ட கருங்குருவி வலமிருந்து இடம் சென்றது போலும்.' ஏனெனில் கால் நடையாய்ச் சென்ற இவர் ஊருக்கு திரும்பிவரும் பொழுது 'கனக தண்டி' மேல் ஏறி வந்தார்.

உலகத்தில் பிரத்தியட்சமாய் நடப்ப தென்னவென்ருல் ஒருவன் சுகத்தை அநுபவிக்க வேண்டுமென்ருல் அவன் கஷ்டப்பட்டுத் தீர வேண்டும். அன்றேல் அவ் வின்பங்கள் அஸ்திவார மில்லாத வீடு மாதிரிதான். அதுபோல் தரித்திர நாராயணராய்ச் சென்ற அரியநாதர் அரண்மனையில் எவ்வளவோ சேவகர் வேலைக்கு அடி போட்டும் பிரயோஜன மில்லாமல் கடைசியில் கொட்டியம் நாகம நாயக்கர் வீட்டில் கணக்கப்பிள்ளையாக அமர்ந்தார். நாகம நாயக்க ரென்பவர் தக்ஷிணநாடுகளுக் கெல்லாம் மகா மண்டலேசுரராய் விளங்கினுர். அவருக்கு ஒரு ஆண்மகவு ஆண்டவன் அருளால் பிறந்தது. அவன் பெயர் விசுவநாதன். தக்க வயது வந்தவுடன் கிருஷ்ணதேவ ராயருக்கு ஊழியங்கள் செய்து அவருடைய பிரியத்தைக் கவருவதற்கு அங்கே கொண்டு சேர்த்திருந்தார். விசுவநாதரும் நாளுக்குநாள் நாபதியின் 'நட்பை கொள்ளை கொண்டார். "உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்" என்னும் உண்மைப்படி 'விசுவநாதருடன் அரியநாதர் நண்பரானது ஆச்சரியமல்ல. அரியநாதரும் விசுவநாதரின் உதவியால் அரசனின் அன்பைப் பெற்ருர்.

இவ்வாறு நடந்து கொண்டிருக்கையில் தன் யஜமானருடன் அரியநாதர் மகாராயரின் சபைக்குச் செல்ல நேர்ந்தது. அங்கு அநேக வித்துவான்களும் போர் வீரர்களும், மந்திரிகளும் வீற்றிருந்தார்கள். அங்கே

விளையாட்டாக பேசிக் கொண்டிருக்கையில், "இன்று காலை நாம் அரண்மனைத் தடாகத்தில் நீராடச் சென்றபொழுது முக்காற்சாணுள்ள அழகிய தாமரை மொட்டு தான் முழுவதும் தண்ணீருக்குள்ளும் மொட்டு மட்டும் தண்ணீருக்கு மேலும் நின்றது. தொப்பென்று குதிக்கும்பொழுது அது 3¾ சாண் நீளம் விலகி மொட்டும் தண்ணீருக்குள் அமுங்கி விட்டது. இப்பொழுது தடாகத்தின் ஆழ மென்னவென்று அரசர் அங்குள்ளவர்களின் மூளைக்கு வேலை கொடுத்தார். எல்லோரும் முணு முணு வென்றார்கள். ஒருவன் நான் போய் அளந்து வருகிறேனென்றான். கடைசியில் அரியநாதரைக் கேட்க அவர், "அதோ நிற்கிறாரே விசுவநாதர்; அவர் உயரமே தான்" என்றார். உடனே நரபதி, விசுவா, உன் உயரமென்னவென்று கேட்க விசுவநாதர் ஒன்பது சாண் என்றார். உடனே ஒருவனை விட்டு அளந்து பார்க்க ஒன்பது சாண் ஆழமே இருந்தது. அதுகண்ட அரசன் அரியநாதரின் புத்திக்கூர்மைக்காக அன்று முதல் அவரை அரண்மனைச் சேவகராக்கிக் கொண்டார்.

விஜயநகர சமஸ்தானத்தில் நவராத்திரி விழாவை விமரிசையாக கொண்டாடுவது வழக்கம். படைவீரர்கள் வேட்டையாடிக்கொண்டு வரும் காட்டெருமையைக் காளிதேவிக்குப் பலி கொடுத்ததோடு விழாவும் முடிவுறும். எருமையை வெட்டும்போது அது ஒரே வெட்டில் மடிய வேண்டும். அதாவது கழுத்துத் துண்டாகத் தெறித்து ஓடவேண்டும். இல்லையேல் நாட்டுக்கு கேடு வந்துவிட்டதென்பதே ஜனங்களின் மூட நம்பிக்கையாக இருந்து வந்தது. இந்த மூடத்தனமான கோரச் சம்பவம் இன்னும் நம் நாட்டில் நடந்து வரும்பொழுது அந்தக் காலத்தில் உண்டான மூட நம்பிக்கையை குறை சொல்லி என்ன பயன்? ஆகவே, அரியநாதர் சேவகரான ஆண்டிலே நவராத்திரி விழாவும் பிறந்தது. அப்பொழுது பலிக்குச் சரியான கொழுத்த எருமையொன்று அகப்பட்டது. அதனது கொம்புகள் கழுத்தைக் காத்து அதன் மேலாக இருந்ததனால் கழுத்தை ஒரே துண்டாக வெட்ட சாத்தியமில்லாமல் போய்விட்டது. எதடா, வந்துவிட்டது போலிருக்கிறதே ஆபத்து என்று, ஜனங்களும் மற்றும் அதிகாரிகளும் பீதிகொள்ள ஆரம்பித்து விட்டார்கள். இந்தச் சமயத்தில் தான் அரியநாதர் ஒரு குழியைத் தோண்டி அதில் பசும்புல்லைப் போட்டால், மாடு புல்லைத் தின்னும்போது அதனது கழுத்து குழிக்குள் சாய்ந்தும் கொம்புகள் வேறாக விலகி நிற்குமென்றும் சரியான யுக்தி சொன்னார். இவ்வளவு கூரிய புத்தியைப் படைத்தவர் என் ஜீவகாருண்யத்தை படையாமல் போனார் என்று சிறிது வருத்தமடைய வேண்டியிருக்கிறது. பின் விழா வெகு அழகாக நிறைவேறினதென்று சொல்லவும் வேண்டுமோ? ஆகவே தேசத்துக்கு வரும் ஒரு பெரிய ஆபத்தைக் காத்தாரென்று அவரைப் பன்முறை புகழ்ந்து அவருக்கு அன்று முதல் கணக்கப்பிள்ளை உத்தியோகம் கொடுக்கப்பட்டது.

இவ்வாறு வேலையில் படிப்படியாக உயர்ந்துகொண்டு வருகையில் கலிங்கத்திலும் இராயச்சூர் பக்கங்களிலும் இந்திய சிற்றரசர்களாலும் முகமதியர்களாலும் நேர்ந்த கலகங்களை அடக்குவதற்கு மகாராயருடன் அரியநாதரும் சென்றபோது தம் போர்த்திறனையும் வீரத்தையும் மெய்ப்பித்துக்

காட்டி மந்திரி சபையில் ஒரு ஸ்தானத்தையும் முதலியார் என்ற இராணுவப் பெரும் பட்டத்தையும், பல்லக்கேறும் உரிமையையும் இவர் பெற்றார்.

அந்தக் காலத்தில் விஜயநகர சமஸ்தானத்துக் கர்த்தாக்களின் மேற்பார்வையில், சேர சோழ பாண்டிய வேந்தர்கள் தத்தம் நாடுகளை ஆண்டு வந்தனர். கிருஷ்ண தேவராயர் ஆட்சியிலே சோழ நாட்டை வீர சேகரனும் பாண்டிய நாட்டைச் சந்திர சேகரனும் ஆண்டு வருகையில், வீர சேகரன் திடீரென்று பாண்டியின் மேற் படையெடுத்துச் சென்று, சந்திர சேகரனை வென்று துரத்தி விட்டான். இது கண்ட நரபதி நாகம நாயகரை அனுப்பி வீர சேகரனை வென்று நாட்டை மீட்டு சந்திர சேகரனிடம் கொடுக்கும்படி, கட்டளையிட்டார். நாகம நாயகனும் அவ்வாறே வீர சேகரனை வென்று நாட்டை தானே ஆண்டு வந்தான். இதனால் மனமொடிந்து சந்திரசேகரன் இறந்தான். ஆனால் அவன் மகன் சந்தாகுமாரன் ஓடோடியும் வந்து, "மகாராஜாதி ராஜ நரபதி மகாராயரே! "வேலியே நின்றுல் தெய்வமே காவல்" என்பர்; தங்கள் உத்தரவுக்கிணங்க நாகம நாயகர் நாட்டை மீட்டு எங்களிடம் கொடுக்காமையால் என் தந்தை மனமொடிந்து இறந்தார். இப்பொழுது நான் பரதேசியாக திண்டாடுகிறேன்.

"அல்லற்பட் டாற்று தழுத கண்ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை"

என்று நாயனுர் கூறியிருக்கின்றன" றென்று ஓலமிட்டுக் கண்ணீர்க் கடலிலாழ்ந்தான். பின் நரபதி கோபம் கொண்டு நாகம நாயகருக்கு தூதனுப்பியும் சரியான பதிலில்லை. உடனே அரசன் சபையைக் கூட்டி அந்த சண்டாளத் துரோக நாகம நாயகனின் சிரசைக் கொண்டு வரவல்ல வீரன் எவனும் இங்கில்லையா? என்று கர்சித்தார். நாகம நாயகரை ஒருவரும் மிஞ்ச முடியாததால் யாரும் பதிலுரைக்கவில்லை. என்ன, இங்கிருப்பவர்களெல்லோரும் கோழைகளா என்று மறுபடியும் கர்ச்சித்தான். உடனே வீராதி வீரனை விசுவநாதர் இரண்டு தோள்களிலும் தட்டிக்கொண்டு, 'அரசே விடை கொடுங்க' ளென்றான். 'யான் அவரது ஒரே மகனென்றாலும் நான் ஒரு நாளும் ராஜத் துரோகம் செய்ய மாட்டேன். உண்ட சோற்றுக்கு இரண்டகம் ஒருநாளும் நினைக்கமாட்டேன். ஆகவே, என் மீது சிறிதும் சந்தேகிக்காமல் விடை கொடுங்கள்' என்றார் விசுவநாதர். அரசனும் மற்றெல்லோர்களும் ஆச்சரிய மடைந்தனர். உடனே அரசனும் விடை கொடுத்தான். ஆனால் 'பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்' என்பது போல் அரிய நாதரையும் விசுவநாதருடன் அனுப்பி, முன் சொன்னது போலல்லாமல் சிறை செய்து நம்மிடம் அனுப்பி விடென்றார்.

உடனே அரியநாதரும் விசுவநாதரும் புறப்பட்டுச் சென்று நாகம நாயகரை சந்தித்துப் பேசி உடனே கைது செய்ய எத்தனித்தார்கள். ஆனால் அது பலிக்கவில்லை. பின் சண்டை செய்தே நாகம நாயகரை கைது செய்தார்கள். ஆனால் விசுவநாதர் தந்தையிடம் மிகவும் மரியாதையுடன் நடந்து அவரது ஆசியையும் பெற்றார். ஆனால் எதிர்பாராதவாறு நாகம நாயகர் கொஞ்சநாள் கழித்து விடுதலை செய்யப்பட்டார். இதற்குள் சந்தாகுமாரனும் மண்ணுலகத்தில் நிரா வெறுப்புக் கொண்டு விண்ணுலகத்தை

யடைந்தான். ஆகவே, மகாராயர் பாண்டிய நாட்டை ஆளுவதற்கு அரிய நாதரையும் விசுவநாதரையும் நியமித்தார். அப்பால், விசுவநாதரை பாண்டியனுக்கி தளவாய் என்ற பட்டத்தோடு அரிய நாதர் வெகு திறமையாக ஆண்டு வந்தார். ஆகவே, இவ்வளவு தூரம் முன்னேறியதற்கு காரணம் அரிய நாதரின் போர்வலி, மந்திரச் சூழ்ச்சி, ஆட்சித் திறமை, யோக்கியதை, மற்றும் புத்திக் கூர்மையுந் தானென்றால் மிகையாகாது.

இவ் வண்ணம் தளவாய் அரியநாத முதலியாரும் விசுவநாத நாயகரும் கூடிப் பாண்டிய மண்டலத்தைக் கைக்கொண்டு ஆளத் தொடங்கிய காலத்தில் நாடிருந்த நிலைமையைச் சொல்வது மிகவும் அத்யாவசியம். மகமதியர்கள் பழைய வேந்தர்களை ஓட்டி விட்டு இரு தலை முறைகளாக கொடுங்கோலாட்சி நடத்தினார்கள். பின் ஹோய் சால வம்சத்தார்கள் மகமதியர்களை ஓட ஓட அடித்தார்கள். அதன் பின் அரிய நாதர்—விசுவநாதர் படையெடுப்பும் ஆதீனமும் நிகழலாயின. சோழ நாடும் பாண்டியுங் கலப்பதால் ஆட்சி யுரிமை எல்லைகள் நன்கு வரையறுக்கப் படாத பிரதேசத்திலே, கள்ளர் மறவர்களின் இம்சை பொறுக்க முடியாததா யிருந்தது. பின் பழைய பாண்டியன் ஒருவனது வைப்பாட்டி மக்கள் ஐவர் 'பஞ்ச பாண்டியர்' என்ற பட்டத்தைப் பூண்டு, "யானும் உண்டு பேயாடி; எனக்கும் உண்டு பாற்சோறு" என்று நாட்டுக்கு உரிமை பாராட்டி வந்து தொந்தரவு செய்தார்கள்.

இந்த மாதிரி தொந்தரவுகளை அறவே நீக்கி நாட்டையும் சீர்திருத்தி, தமக்குரிய வல்லத்துக் கோட்டையைச் சோழ நாட்டாருக்குக் கொடுத்து, திருச்சிராப் பள்ளியைத் தாம் கொண்டு, இரு நாட்டெல்லைகளையும் வரையறுத்துக் கொண்டனர். காவிரியின் இரு பாகங்களையும் வெட்டி நன்றாய் சீர்திருத்தி மற்றும் அக்கிரகாரங்களையும் கிராமங்களையும் ஏற்படுத்தினார். திருச்சிராப் பள்ளியை இரு பெருங் கோட்டை மதில்களாலும் அதற்கு வெளியே ஒரு பெரிய அகழியினாலும் காவல் செய்தனர்.

இவ் வேலைகள் ஒருவாறு நடந்துகொண்டு வருகையில் இவற்றைக் கண்காணித்து நிறைவேற்ற விசுவநாதரை விட்டுவிட்டு அரியநாதர் தென்பால் சென்று அங்கே பஞ்ச பாண்டியர்களோடு போர் புரியலானார் சுமார் ஆறுமாத காலமாக கடுஞ் சண்டை நடந்தது. அதற்குள் விசுவநாதரும் நண்பரோடு சேர்ந்து வெகு மும்மரமாகச் சண்டை போடலானார். இவ்வாறு நடந்த சண்டையில் வீணாக ஆட்கள் நஷ்டமும் திரவிய நஷ்டமும் தான் ஏற்பட்டது. வெற்றி ஒரு பக்கமும் தோன்றுவதான அறிகுறியைக் காணவில்லை. உடனே அரிய நாதர் ஒரு அழகான, புத்தி கூர்மையான யுக்தியை சொன்னார். அதாவது தனது கட்சியில் ஒருவனும் எதிர்க்கட்சியிலொருவனும் சண்டை செய்ய வேண்டியது. அதில் யார் ஜெயிக்கிறார்களோ அவரே போரில் ஜெயித்தவர்களாவர்கள். சண்டை கயத்தாற்றுப் பெருமான் சந்நிதியில் நடந்தது. இவர் கட்சியில் விசுவநாதருக்கும் எதிர்க்கட்சியில் வீமன் என்ற குண்டோதரனுக்கும் சண்டை நிகழ்ந்தது. தெய்வ கடாட்சத்தால் விசுவநாதரே ஜயித்தார். நாடனைத்தும் நாயகர் வசமாயிற்று. உடனே விசுவநாதர் மதுரைக்குச் சென்றார். ஆனால் நாட்டைச் செப்பனிடுவதிலும் ஆங்காங்குள்ள அக்கிரமங்களையும் குழப்பங்களையும் அடியோடு

நிலை யெடுக்காமல் தொலைப்பதிலேயே தன் வாழ் நாளைக் கழிக்கும் அரிய நாதர் ஒவ்வொரு ஊராய் பண்படுத்திக்கொண்டு திருநெல்வேலி சென்று அவ்வூரில் ஆயிரக்கால் மண்டபம் ஒன்றைக் கட்டி, காவிரியை சீர்படுத்தினது போல் தாமிர பரணியின் இரு கரைகளையும் செப்பனிட்டு கடைசியில் பாளையங் கோட்டையில் ஒரு கோட்டையையும் கட்டினார். பின் அரிய நாதரும் மதுரைக்குச் சென்று எல்லோரும் ஒருங்கே கூடி யோசனை செய்து பாளையப் பட்டுகளை ஸ்தாபித்தார்.

மதுரையமா நகரைச் சூழ்ந்த பெரிய கோட்டையில் 72 கொத்தளங்களைக் கட்டி அவைகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பாளையக் காரனை ஸ்தாபித்தார். பாளையக்காரர்கள் அவரவர் பாளையத்தில் வரி தண்டுதல், குற்ற விசாரணை செய்து தண்டித்தல், படைகளை அமைத்துக் கொள்ளுதல் முதலியவைகளைச் செய்ய வேண்டு மென்று ஏற்படுத்தினார். நாட்டைக் காவல் புரிய அமர நாயக (Military fief) முறையை அனுஷ்டித்தார். இவரது புத்திக் கூர்மையும், மந்திர சூழ்ச்சியும் கிழக்கிந்திய கம்பெனிக் காரர்கள் பாளையக்காரருடன் சண்டையிட்டதில் நன்கு விளங்கிற்று. இஃதன்றி இன்று தென்பாண்டி நாட்டிலே பல வூர்களில் நடக்கும் ஊர்க் காவல் முறை அரிய நாதர் ஏற்படுத்தியதே.

ஒரு நாள் அரியநாதர் தன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பொழுது ஒரு பிராமணர் காவலாளர்களையும் மீறி அரசனிடம் ஒரு சீட்டைக்கொடுத்தார். தன் கைச்சாத்திட்டச் சீட்டாக இருந்ததைக் கண்டவுடன் அரிய நாதருக்குப் பழைய நினைவுகளெல்லாம் படம்போல் இவர் கண் முன் நின்றது. உடனே அரிய நாதர் நீர் யார் என்று கேட்க, அவர் தான் அன்னுருடைய (பிராமணர்) மகனென்றும் இச் சீட்டை ஒரு சந்தர்ப்பத்தில் பார்த்ததும் இங்கே கொண்டு வந்தே னென்றார். அரசன் கொண்ட ஆனந்தத்துக்கு அளவே இல்லை யெனலாம். உடனே பிராமணர்க்கு வேண்டிய சகல சவுகரியங்களையும் செய்து கொடுத்து அன்று முதல் தமது குல குருவாக அவரை அமர்த்திக் கொண்டார்.

இப்படி யிருக்கையில், விசுவநாதர் திடீரென்று இறந்து விட்டார். அவர் தன் குமாரனை குமார கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு ஏற்கனவே முடி சூட்டி யிருந்தார். அரிய நாதர் தனது ஆருயிர் சிநேகிதரின் பிரிவாற்றுமல் வருந்தலானார். இந்த சமயத்தில் மகமதியர் விஜயநகரம் சமஸ்தானத்தைக் கெடுக்க சதி செய்கிறார்க ளென்றும் ஆகவே உடனே சண்டைக்கு ஏராளமான போர் வீரர்களுடன் புறப்பட வேண்டு மென்றும் மகாராயரிடமிருந்து தூது வரவே, அரிய நாதரும் "உடுக்கை இழந்தவன் கைபோல" பரபரத்து உடனே சைனியங்களைச் சேர்த்துக்கொண்டு வடக்கே சென்றார். பரத கண்டத்திலே பாரதப் போர் முதல் சிப்பாய் கலகமென்று சொல்லப்படுகிற 'சுதந்திர புரட்சி' வரையிலும் நடந்த முக்கிய சண்டைகளில் கி. பி. 1565-ம் ஆண்டின் தொடக்கத்தில் தலைக் கோட்டையில் நடந்த சண்டையும் ஒன்றாகும்.

கி. பி. 1565-ம் ஆண்டு ஜனவரி மாதம் 23-ந் தேதி செவ்வாய்க் கிழமை யன்று இந்துக்களும் முகம்மதியர்களும் கடும்போர் புரியலாயினர். உண்மையாக, இச் சண்டை கிருஷ்ணை யாற்றுக்கு தெற்கே போகபுரம்

என்னும் ஊரினருகே தான் நிகழ்ந்தது. தனது தம்பிமார்களான திருமலை, வெங்கிடாத்திரியுடன் இராமராயர் சுல்தானை எதிர்த்து கடுஞ்சமர் புரிந்தார். அந்தோ! லக்ஷக்கணக்கான ஆட்கள் வாழைக்குலை மாதிரி சாய்ந்தார்கள். கோடிக்கணக்கான திரவியங்கள் குப்பைக்குள் மறைந்தன. வெங்கிடாத்திரியும் அருமை இராம ராயரும் போரில் இறந்தார்கள். ஆனால் இராம ராயர் இறக்கு முன்பு நடந்த தென்ன?

இராமராயர்:—அரிய நாதரே, நான் இறந்தால் இந்த சமஸ்தானத்தை ஆளும் யோக்யதையும் தீர நெஞ்சமும் உடையவர் நீர் தான். ஆனால் நான் தோற்கப் போவதில்லை என்பது மாத்திரம் நிச்சயம். 'சூறை முன் பூளை போல்' சுல்தானைப் பறக்க வைப்பேனென்றார்.

அரியநாதர்:— மாப்பிள்ளை சொல்வது சரிதான். ஆயினும் ஜய லக்ஷ்மியும் தனலக்ஷ்மியைப் போல் ஒரு வேசை தானே. இன்று ஒருவன் கையில், நாளை ஒருவன் கையில் தானே என்றார்.

இராமராயர்:—அரியநாத, யாது மொழிந்தீர்? நீர் சொல்கிறபடி ஒருகாலும் சொப்பனத்திலும் நடக்காது.

போரில் இராமராயர் இறந்ததும் திருமலை என்பவர் சுமார் 10 கோடி பவுன் மதிப்புள்ள திரவியங்களை சுமார் 500 யானைகளின் மேல் வைத்து ஏற்றிக்கொண்டு பெனுகொண்டா ஓடி விட்டார்.

அரியநாதர் இதைக் கவனித்தார். உடனே அவருக்கு நெஞ்சம் குமுறினது. துடிதுடித்தார். "இந்த ஆமது நகர பூனைகளைக் கொல்லாமல் யான் திரும்புவதா? ஒரு காலும் என் மனம் தோல்வியை ஒப்புக்கொள்ளாது. அடிமையாய் வாழ்வதை விட வீர சொர்க்கம் அடைவதே மேல்" என்றெல்லாம் புலம்பினார். உடனே சகாக்களைத் தேடி விரைந்தார். துரதிஷ்ட வசமாக சகாக்கள் ஒத்துழைக்க மறுத்து விட்டார்கள். ஆகவே, அரியநாதர் வேறு வழி யில்லாமல் பெனுகொண்டாவுக்கு புறப்பட்டுச் சென்றார். ஏனென்றால் அவருக்கு நாட்டமெல்லாம் சமஸ்தானத்தை சீர்குலையாமல் காக்க வேண்டுமென்ற எண்ணம் அவர் மனதில் ஊறிக் கிடந்தது. பின் திருமலையுடன் கலந்து சமஸ்தானத்தை ஒரு குடைக்கீழ் ஒடுக்கி யாளுதல் தவறு என்று கண்டு மூன்று பகுதிகளாகப் பிரித்து பெனுகொண்டாவை தலைநகராக்கி அங்கிருந்து ஆள்பவர் முகம்மதியர் தொந்தரவை வடக்கே காக்க வேண்டுமென்றும், ஸ்ரீரங்கப் பட்டிணத்தை ராஜதானியாகக் கொண்டு மலைப்பிரதேசங்களைக்காக்க வேண்டுமென்றும், சந்திரகிரியை ராஜதானியாகக்கொண்டு ஒருவர் சேர சோழ பாண்டி மண்டலங்களை கண் காணிக்க வேண்டுமென்றும் பின்னிருவரும் அந்தஸ்தில் முன்னவர்க்கு கீழ்பட்டவரென்றும் இம் மூன்று சமஸ்தானத்தின் தளவாய் பட்டம் அரியநாதருக்கென்றும் தீர்மானித்தனர். இங்ஙனம் முடிவு செய்த பின்பு அடுத்த ஆண்டு இறுதியில் அரியநாதர் தெற்கே திரும்பி வந்து மீனாக்ஷி சுந்தரேசரைத் தரிசனம் செய்து கொண்டு, மதுரையிலேயே தங்கி மதுரை நாயகரின் ஆட்சிக்குட்பட்ட நாடுகளைக் கண் காணித்து வந்தார்.

குறிப்பு:—(மற்றொரு பிரதியிலுள்ளதை ஒட்டி எழுதப்பட்டது.)

# பிரிந்தவர் கூடினர்

(இடைசேவல்-ஜி. அழகிரிசாமி.)

மிதிலை நகரில் விசுவாமித்திரனைப் பின்தொடரும் இராமனும் இலக்குவனும் பிரவேசித்தனர். நாட்டிய அரங்குகள், விளையாட்டு ஸ்தலங்கள், நீராடும் குளங்கள் முதலியவற்றைக் கடந்து ஜனகனது அரண்மனையைச் சூழ்ந்துள்ள மதில் புறத்தை அடைந்தார்கள். எங்கு பார்த்தாலும் இசை யின்பங்கள், உல்லாச விளையாட்டுக்கள், பூஞ்சோலைகள், செல்வத்தின் செழிப்பு. அப்பொழுது கன்னிமாடத்திற் கருகே அன்னங்கள் தங்கள் பேடைகளோடு விளையாடிக் கொண்டிருந்தன. அவை அம் மாடத்தில் பொன்னின் சோதி போலவும், பூவில் வாசனை போலவும், தேனில் சுவை போலவும், செஞ்சொற்களால் யாத்த கவியில் பொலியும் இன்பம் போலவும் இருந்தனவாம்.

அந்தக் கன்னிமாடத்தில் வந்து நிற்கிறாள் ஓர் அழகிய இளம் பெண். தனக்குவமை இல்லாத அழகியா யிருக்கிறாள். உலகத்தில் உள்ள அழகு மிக்க பெண்களுக்கு அவள் உவமையாக இருக்கும்போது அவளுக்கு யாரை உவமித்துச் சொல்வது? சொல்லப்புகுந்தால் பார்வதியைச் சொல்ல முடியும். பெண்களெல்லாம் உச்சிமேல் கைகூப்பித் தொழும் பொறுமைய ளான அந்தப் பெண், சீதையின் உடல்வனப்பைப் பார்த்தவர்கள் அந்தக் காட்சியின் எல்லை காணுமல் இப்படிப்பட்ட அழகைப் பார்க்க "இமையாத கண்களைப் பெறவில்லையே" என்று வருந்தினர்களாம். ஆனல் இமையாத கண்களைப்பெற்ற தேவர்கள் சொல்கிறார்கள். "இந்த அழகை இரண்டு கண்களால் பார்த்துவிட முடியாது."

அவர்களுக்கும் இரண்டு கண்கள் காணவில்லை. பாருங்கள்:

"உமையாள் ஒக்கும், மங்கையர் உச்சிக்கரம் வைக்கும்
கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணுர்,
'இமையா நாட்டம் பெற்றிலம்' என்றார். 'இரு கண்ணால்
அமையாது' என்றார் அந்தர வானத்தவர் எல்லாம்."

இருந்தாலும் கம்பர் ஒருவாறு வர்ணிக்க முற்படுகிறார். சந்திரனுடைய பிரகாசம் சூரியன் முன் மழுங்குவதுபோல் மேனகை முதலிய கந்தருவ மாதர் முகங்கள், சீதையின் அழகொளியில் பொலி விழக்கின்றனவாம். இவள் இத்த உலகிடைப் பிறக்க யார் தவம் செய்தார்களோ? உடம்பு வாட அந்தணர் தாம் நோற்றார்களோ? அல்லது தருமதேவதையோ? இவ் வுலகமோ! விண்ணுலகமோ? தேவர்களோ? தெரியவில்லை.

தோழிகள் மின்னல்கள் செளிவதைப்போல் குனிந்து மின்னரசு என்னும் சீதையின் அழகைக் கண்டு சேவிக்கின்றனர். அவளை மானே, தேனே, அமிர்தமே என்று போற்றுகிறார்கள். இன்னும் இவள் அழகைப் பார்த்து மலைகளும், சுவர்களும், கல்லும், புல்லும் உருகி விடும்போ லிருக்கின்றன.

இவன் பிறக்கு முன், பல பெண்களால் அணியப்பட்ட ஆபரணங்கள் அவர்களுக்கு அழகைக் கொடுத்தன. ஆனால், சீதை பிறந்து, அவற்றை அணிந்த பின் அவைகள் தாமும் அழகைப் பெற்றன. இவ்விதம் நினைக்கவும் அரிதாகிய பேரழகுடன் கன்னிமாடத்தில் நிற்கிறாள் சீதை. அப்பொழுது மதிலையடுத்து விசுவாமித்திரனுக்குப் பின்னால் வரும் இராமன் எப்படியோ இவளைப் பார்த்துவிட்டான். இவளும் அவனைப் பார்த்தாள். அவ்வளவுதான். இருவர் கண்களும் போரிட ஆரம்பிக்கின்றன! ஒருவர் கண்களோடு மற்றொருவர் கண்ணிணை பற்றுகிறது. ஒன்றை யொன்று அனுபவித்துச் சுவைக்கின்றன. ஒருவருடைய பார்வை மற்றொருவரைக் குத்துகிறது. இருவர் உள்ளத்திலும் அக்காதல் பார்வை ஆழ்ந்துவிடுகிறது. அப்பொழுது தன்னுணர்ச்சி இருவருக்கும் நிலைபெறாது இருவர் அறிவும் ஒற்றுமைப்பட்டு விடுகின்றன. எவ்வளவு சக்தி மிகுந்த பார்வைகள்! சிறிது நேரத்தில் சம்பாதித்த பழக்கம்தான் எவ்வளவு!

ஒருவர் அழகை ஒருவர் அனுபவித்த பார்வை யென்னும் கயிற்றால் கட்டி, ஒருவரை மற்றொருவரது உள்ளம் இழுக்கிறது. அதனால் வில் தரித்த இராமனும் வாள்போன்ற கண் படைத்த சீதையும் ஆகிய இருவரும் ஒருவர் இதயத்தில் ஒருவர் மாறி மாறிப் புகுந்துகொள்ளுகிறார்களாம். இவ்விஷயத்தைத் தெரிவிக்கும் கம்பர் பாட்டு நம் இதயத்தில் புகுந்து இடம்பெற்ற மாதிரி.

"பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்(து)
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்(கு) இதய மெய்தினர்."

உயிர் ஒன்று உடல் இரண்டாக உள்ள இவ்விருவரும் இவ்விதம் சந்தித்த மாத்திரத்தில் காதல் கொள்ள இவர்களுக்குள் முன்பின் ஏதாவது சம்பந்தம் உண்டா? ஆம். பாற்கடலில் சுகமாக இவ்விருவரும், விஷ்ணுவும் இலக்குமியுமாகப் பள்ளிகொண்டிருந்தனர். ஆனால் அந்தப் பாற்கடலை விட்டுச்சென்று இராமனாகவும் சீதையாகவும் பிறந்த பின் இதுவரைக்கும் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்கவில்லை. வெகுகாலங் கழித்து அவர்கள் முதல் முதலாகச் சந்தித்தார்கள். அப்பொழுது மகிழ்ச்சியும் பாசமும் உண்டாகாதா? "பிரிந்தவர் கூடினால் பேச வேண்டுமோ?" ஆம், சொல்லவா வேண்டும்?



# விமலா



(நாகூர்-எம். கனகசபை)

மாலை சுமார் மணி ஐந்தரை யிருக்கும். நானும் என் நண்பனும் கடற்கரைக்குச் சென்றோம். அன்று திருவல்லிக்கேணி கடற்கரையில் திரள், திரளாக மக்கள் போய்க்கொண் டிருந்தனர். என்றும் இவ்வளவு கூட்டம் கூடியது கிடையாது. ஆகையால் நாங்கள் வியப்புற்று கூட்டத்தின் காரணத்தை விசாரிக்க எண்ணினோம். இதற்குள்ளாக ஒரு சிறுவன் துண்டுப் பிரசுர மொன்றை எங்களிடம் கொடுத்துவிட்டுச் சென்றான். அதில் கீழ்க்கண்டவாறு குறிக்கப்பெற்றிருந்தது.

புரட்சி ஓங்குக ! விதவை மணம் ஓங்குக !

இன்று மாலை 6-மணிக்குத் திருவல்லிக்கேணி கடற்கரையில் விதவா விவாக சங்கத் தலைவரும், இந்தியாவிலேயே சமூகச் சீர்திருத்தவாதியுமான 'மகேசுவரம்' என்பவரால் விதவை மணத்தைப் பற்றி தக்க ஆதாரங்களுடனும், உண்மையாக நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறித்தும் பேசப்படும். அனைவரும் வருக.

இங்ஙனம் :
விதவா விவாக சங்கத்தார்.

ஆகவே, ஆடவரும் பெண்டிரும் அணியணியாக வந்து கூடினர். மகேசுவரம் நல்ல சொற்பொழிவாளர்; ஆகையாலும், தான் சொல்வது போலவே செய்கையிலும் செய்துகாட்டக் கூடியவராகையாலும் நானும் என் நண்பனும் அன்று கூட்டத்தைக் கேட்டுவிட்டுப் போவதாகவே தீர்மானித்தோம்.

கூட்டமும் குறித்த நேரத்திற்கு ஆரம்பமாயது. தலைவராக அமர்ந்தவருக்கு மாலை முதலியவைகள் போட்டு மரியாதைகள் செய்த பின்பு அவர் முன்னுரையாக சில கூறி மகேசுவரம் என்பவரை பேசும்படிக் கேட்டுக் கொண்டார். அவரும் எழுந்தார். கூட்டத்தில் அமைதி நிலவியது.

இக்கூட்டத்தைக் கண்டு அவர் வெகுவாகப் புகழ்ந்து பேசினர். சமூக சீர்திருத்தத்திற்கு வரவர ஆதரவு அதிகமாகி வருவதைக் கண்டு தான் மகிழ்வதாகவும், பொது மக்களாகிய அவர்கள் சொற்பொழிவுகளைக் கேட்டுவிட்டு 'அவர் நன்றாகப் பேசினர்' 'இவர் அடித்துப் பேசினு'ரென்று மாத்திரம் கூறிவிட்டுச் சென்றால் அதனால் சொற்பொழிவாளருக்கு தொண்டை கிழிய கத்தினதைத் தவிர வேறு ஒருவித நன்மையும் ஏற்படப்போவதில்லை யென்றும், கேட்பவர்களுக்கும் நன்மை விளைந்துவிடா தென்றும் கூறிவிட்டு மேலும் விதவைகளின் துன்பங்களையும், பாலிய மணத்தால் விளையும் கேடுகளையும் விளக்கித் தக்க சான்றுகளுடன் எடுத்துக் கூறினர். கடைசியாக கீழ்வரும் கதையைக் கூறி விளங்கவைத்தார்.

'நாகையில் பெரிய பணக்காரர்களில் ஒருவரும் பிரபல வியாபாரியுமான 'ராஜமையர்' என்பவருக்கு விமலா என்ற ஒரே பெண்ணுண்டு. விமலா பள்ளிக்குச் செல்லும் பச்சிளம் பருவத்திலேயே பாழும் மணம் நடந்தது. அப்போது மணமகனுக்கு எட்டு வயது. பள்ளியில் இரண்டாம்

வகுப்புப் படித்துக்கொண்டிருந்தான். பாருங்கள் மண மக்களை. இவர்களுக்கு எவ்வளவு தூரம் 'மணம்' என்பதைப் பற்றித் தெரியுமென்பதை நீங்களே ஆராய்ந்து கொள்ளுங்கள். மணவினை நடைபெறும்போது விமலா ஏதோ பொம்மைக் கலியாண மென்றே நினைத்திருந்தாள். ஏன்? அவள் தன் வயதுப் பெண்களுடன் கூடி 'மரப் பாப்பாவுக்கு' மணம் முடிப்பதற்கும் இதற்கும் என்ன வேறுபாடு? இதில் மணமக்கள் 'மரப் பாப்பாக்கள்' ஆனால் இப்பொழுது நடக்கும் மணத்தில் பேசும் இரு மானிடக் குழவிகள். நமக்காக மணம் நிற்கப்போகிறதா என்ன? மணமும் நடந்தது. நாட்கள் ஓடி மறைந்தன. விமலா கழுத்தில் மங்கல நாணிருப்பதையும், மற்றவர்கள் சொல்லவும் கேட்ட பிறகுதான் தனக்கு மணம் நடந்துவிட்டதாக எண்ணினாள்.

விமலா பள்ளிக்குச் சென்று வருங்காலை எதிர்வீட்டு பொன்னம்பலத்திற்கும் இவளுக்கும் நட்பு உண்டாயிற்று. பள்ளிக்கூட நட்பு வெறும் நட்போடு மட்டும் நிற்கவில்லை. காதலாகவும் அங்குரித்தது. பொன்னம்பலம் வேளாள வகுப்பைச் சேர்ந்தவன். நல்ல கட்டான மேனியும், கருத்து சுருண்ட குஞ்சியும், அப்போதே அரும்பிய மீசையும் அவனது அழகினையும், இளம்பருவத்தினையும் விளக்கின. விமலாவின் காதல் இளந்தளிர் போல் துளிர்த்தது. இருவரும் அடிக்கடி சந்தித்து தங்கள் காதலை வளர்த்துக் கொண்டார்களென்று கூறின் மிகையாகாது.

காலை எட்டு மணியிருக்கும். தபால்காரன் வரும் நேரமும் அதுதான். பொன்னம்பலம் தனக்குக் கடிதங்கள் வந்திருக்கின்றனவோவென்று பார்ப்பதற்காக வெளியிலேயே நின்றிருந்தான். தபால்காரனும் இவன் எதிர் பார்த்தபடியே வந்தான். ஆனால் இவனுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. எதிர் வீட்டிற்கு மாத்திரம் ஒரு மஞ்சள் கடிதம் கொண்டுவந்து கொடுத்து கையெழுத்து வாங்கிச் சென்றான். கடிதத்தைக் கண்டதுமே தந்தியோ வென்று சந்தேகித்த பொன்னம்பலத்திற்கு கையெழுத்து வாங்கிச் செல்வதைக் கண்டதும் நிச்சயமாயிற்று. யாது நிகழ்ந்ததோ வென்று அறிய ஆவலுள்ளவனாய் அங்கேயே நின்றிருந்தான்.

தபால்காரன் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கு ஒரே அழுகைக் குரலாயிருந்தது. காரணம் விமலாவின் கணவன் 'சந்துரு' சென்னையில் மோட்டார் ஏறி இறந்துவிட்டதே யென்பதை யறிந்தான். இனி விமலா பள்ளிக்கு வரமாட்டாளே, நாம் அவளைப் பார்க்கமுடியாதே என்ற கவலைதான் இவனுக்கு முதலில் தோன்றியது. சென்னைக்குப் போக எல்லோரும் கிளம்பினர். வண்டியில் செல்லும்போது விமலாவை கூர்ந்து கவனித்தான் பொன்னம்பலம். இயற்கையாக வருத்தம் தோன்ற வேண்டியதிருக்க அவள் முகத்தில் கவலைக் குறியே காணப்படவில்லை. எப்படித் தோன்றும் பால்ய முதல் தன் பதியின் முகத்தைப் பார்த்தறியாதவளன்றோ அவள்? ஆனால் அதற்கு மாறாக அவளது குவளைக் கண்கள் இவனைக் கண்டவுடன் மலர்ந்தன. மறுவிநாடி அவளது முகம் கவலையிலாழ்ந்தது. கண் கலங்கினாள். பொன்னம்பலத்திற்கு ஒன்றும் புரியவில்லை. விமலாவின் வருந்திய முகத்தைக் காணச் சகியாத அவன் ஓய்ந்துபோய் திண்ணையில்

போய்ச் சாய்ந்தான். அன்றைய பொழுது அவனுக்கு மிக்க துன்பத்தைக் கொடுத்தது.

நாலைந்து வாரங்கள் சென்றன. சென்னையிலிருந்து ராஜமையர் வீட்டார் திரும்பி நாகை வந்து சேர்ந்தனர். விமலா முன்போல் பள்ளிக்குச் செல்லவில்லை. இயற்கை யழகே அழகாய்த் துலங்க கலைகளும் அவளது பொற்றிருமேனியினின்றும் நீங்கின. நாட்கள் பல சென்று வாரங்களாயின; வாரங்கள் மாதங்களாயின. மாதங்கள் மறைந்தன. இதற்குள் பொன்னம்பலம் பள்ளிப் படிப்பை விட்டு உலகியலில் ஈடுபட்டான். நம் ஏழை மக்கள் 'வரதக்ஷிணை' கொடுக்க வகையின்றி கடன்பட்டழிவதையும், இள மணங்களால் இன்னலுற்றழிவதையும் காணக் காண அவனது நெஞ்சு உருகிற்று. இவனது பெரு முயற்சியாலேயே நாகையின் கண் மாதர் மறுமணச் சங்கமொன்று ஏற்படுத்தப்பட்டது. அதற்கு நம் பொன்னம் பலமே தலைவன். இவனது ஆதரவினால் அக்கூட்டத்தார் பல சொற்பொழி வாற்றியும், திக்கற்ற விதவைகளுக்கு மறுமணம் புரிந்தும் வந்தனர்.

விமலாவுக்கு இச்சங்கத்தின் தொண்டுகளெல்லாம் தெரியவந்தன. பொன்னம்பலத்தை பொன்னேபோல் போற்றினாள். அவளது தந்தையும் இச்சங்கத்தையும், அதன் தொண்டுகளையும் பாராட்டிப் பேசலாயினர். வெறும் பேச்சளவில் நில்லாது அவ்வப்போது வேண்டிய பண வுதவியும் செய்துவந்தார். ஆகையால் பொன்னம்பலம் இவர் வீட்டுக்கு வர ஒரு வழி உண்டாயிற்று. அதனால் மறைந்த காதல் மீண்டும் முளைக்க ஆரம்பித்தது. மனதின்கண் புத்துணர்ச்சிகள் தோன்றின. அதிகமேன்? அவர்கள் காதலால் கட்டுண்டனர்.

இராஜமையர் மாதர் மறுமணத்தினை ஆதரித்து வந்தாலும், தன் மகளுக்கு மணம் புரிய மயங்கினார். ஊராரின் தூற்றலுக்குப் பயந்தார். இருப்பினும் அவரது மனது மறுமண உணர்ச்சியால் பற்றப்பட்டது. எரிகிற நெருப்பில் எண்ணெய்விட்டாற்போல பொன்னம்பலத்தின் நற்குணமும், அவன் தலைமையில் நடக்கும் சங்கத்தார் தூண்டுதலும் சேர்ந்து விமலாவை பொன்னம்பலத்தை மணப்பதற்குச் சம்மதி கேட்க எழுந்தார்.

விமலா முதலில் சமூகக் கட்டுப்பாடென்னும் பேய்க்கு அஞ்சினாள். ஆனால் தனது தந்தையின் உதவியும், பொன்னம்பலத்தின் உதவியும் வழிக் கொண்டு நடக்கும்போது அப்பேய் ஒன்றும் தீங்கு செய்யாதெனத் துணிந்து அவளும் ஒருப்பட்டாள். நாகையிலேயே மணம் நடத்த அவர் விரும்பவில்லை. மணமக்கள் இருவரையும் நீலகிரி அழைத்துச் சென்று மணம்புரிய நிச்சயித்தார். பொன்னம்பலமும் இவ்வேற்பாட்டிற்கு ஒப்பினான். தன் காதல் கைகூடியதை நோக்க யாருக்குத்தான் மகிழ்ச்சியாயிராது. ராஜமையர் விமலாவுடன் அடுத்த நாள் நீலகிரிக்குக் கிளம்பினார். ஊரிலுள்ளவர்களுக்குத் தன் பங்களாவைப் பார்வையிடப் போவதாகக் கூறிச் சென்றார். முன் கூட்டியே பொன்னம்பலனும் புகைவண்டி நிலைக்கு (Platform) வந்திருந்தான். வண்டியும் வந்தது. எல்லோரும், இரண்டாம் வகுப்பில் பிரயாணஞ் செய்தனர். வழிநெடுக இன்பமாகவே கழிந்தது. நீலகிரி அடைந்ததும் நேரே தன் பங்களாவை யடைந்தார்

ராஜமையர். முன்பே சீர்திருத்த மணத்தை ஆதரிக்கும் தன் நண்பர்கட்குக் கடிதம் எழுதியிருந்ததால் அவர்களும் அங்கு வந்திருந்தனர்.

நல்லோரையில் நண்பர்கள் ஆசீர்வதிக்க பொன்னம்பலத்திற்கும் விமலாவுக்கும் ஆடம்பரமின்றி மணம் நடந்தேறியது. மண மக்கள் காதல் கடலாடி இன்பமனுபவித்தனர். அவர்களை நீலகிரியிலேயே விட்டுவிட்டு இராஜமையர் நாகை திரும்பினர். இதற்குள்ளாகச் செய்தித் தாட்கள் மூலம் செய்தி யறிந்திருந்தனர் நாகை வாசிகள். போற்றுவார் சிலரும், தூற்றுவார் சிலரும் நடுநிலை வகிப்பார் சிலருமாயினர். தூற்றுவாரைத் தூரத் தள்ளுங்கள். விதவை மணம் ஓங்க உங்களாலானதைச் செய்யுங்கள்; நாடு செழிக்க சீர்திருத்த மணம் புரியுங்கள் !" என்று கூறி கூட்டத்தைக் கலைத்தார்.

நானும் என் நண்பனும் வீடு திரும்பினோம். மனைவியை இழந்த என் நண்பன் அப்பொழுதே ஒரு விதவையை மணம்புரிந்து கொள்வதாக நிச்சயித்துவிட்டதாகக் கூறினான். மறு நாளே விதவா விவாக சங்கத்தாருக்கு ஒரு கடிதம் எழுதப்பட்டது. என் நண்பனும் ஒரு இளம் விதவையை மணந்து மக்களுக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கினான்.

மறு ஆண்டு என் நண்பனுக்குப் புத்திரன் பிறந்ததைக் கொண்டாடச் சென்றதில் நானும் ஒருவன்.

---

# கட்டுரையாளர் கவனிக்க.

கட்டுரையாளர் தாங்கள் எழுதும் கதை கட்டுரைகளைப் புக் போஸ்டில் அனுப்பும்போது, ஸ்டாம்பைக் கவரின்மீது சரியாக ஒட்டி அனுப்பவேண்டும். தபால் அதிகாரிகள் கட்டுரைகளைப் பரிசோதிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும்படி கவரை ஒட்டவேண்டும். 'ஆனந்த'னுக்கு வியாசம் அனுப்பும் நேயர்களில் பலர் கவரில் பாதியும் கட்டுரை யெழுதியுள்ள காகிதத்தின்மீது பாதியுமாக ஸ்டாம்பை யொட்டி அனுப்புகிறார்கள். மற்றுஞ் சிலர் கவரை மூடியும், அதன்மீது கயிற்றைக் கட்டியும் அனுப்புகிறார்கள். இது தற்போதைய தபாற் சட்டத்திற்கே விரோதமானதாகையால், மேற்குறித்த விதமாகவுள்ள கவர்களுக்கு இரட்டிப்பாகத் தபாற் கட்டணம் வாங்கிவிடுகிறார்கள். இதனால் நமக்கு கஷ்டமும் நஷ்டமும் ஏற்படுகிறது. இதையெல்லாம் கவனித்துக் கட்டுரையாளர் நடந்துகொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

பத்திராதிபர்.

# பாப உலகமே!

(எம். முத்துகிருஷ்ணன்.)

“இருபது நூற்றாண்டுகட்கு முன்னர் உனது முரட்டு தேகத்தை அழுத்தியது பொதி பொதியான பாபமூட்டை. தத்தளித்தாய்! நெளிந்தாய்! விழிகள் பிதுங்க அலறினாய்!”

வந்தது ஒரு ஜோதி; இயேசு என்ற புனித நாமத்தோடு. குறைந்தது உன் பாரம். கரைந்தது உன் பாபமூட்டை. உடம்பைச் சிலிர்த்தாய்; ஒய்யாரமாய் நிமிர்ந்தாய்; உவகையோடு திளைத்தாய்.

மறுபடி—இருபது நூற்றாண்டுகட்குப் பின்னர் அதே பாப மூட்டை விழுந்திருக்கிறது உன்மேல். என்......? அதைவிட பன் மடங்கு கனம் தான். திரும்பவும்—சோர்கிறாய்; துடிக்கிறாய்; தத்தளிக்கிறாய்; ‘விமோசனம் உண்டா......?’ என அலறுகிறாய். அட பாப உலகமே!......

* * * *

மளமளவென பாய்ந்து வந்து கடலோடு கலக்கிறது ஓர் நதி. முகத்துவாரத்தில் தன்னுடன் வந்த மணலை சிறிது குவிக்கிறது அப்போது. நாளாக ஆக சிறிய மணல்மேடு பெரிய நிலப்பரப்பாகி விடுகிறது. ஆமாம்! அதேபோல்தான் பாபமும்.

ஆதாம், ஏவாள் இவர்களால் ஆரம்பித்தது பாபம். சந்ததி சந்ததியாக அதன் ‘சுமை’ பெருகி, மலையாய்விட்டது பின்னால்.

கர்த்தரின் ‘நேச வொரு மகவான’ இயேசுவினால் உலகின் கஷ்டத்தைக் காணச் சகிக்கவில்லை. “மாந்தரின் பாபங்களை எல்லாம் நானே ஏற்றுக்கொள்ளுகிறேன். அதனாலேற்படும் கஷ்டங்களையும் அனுபவிக்கிறேன் நான்,” என அறை கூவினார் அவர். புறப்பட்டார் உலகிற்கு. சோலை ஒன்றினூடே தடதடவென் வந்தார். அவ்வமயம் சோலையிலுள்ள உயர் சினைகளிலெல்லாம் கொழுமையுடன் கொத்துக் கொத்தாய் நிறைந்திருந்தன மொட்டுகள். அவை வாய் திறக்கவும் பொல பொலவென சொரிந்தது செந்தேன். அவை பார்ப்பதற்கு,

அழகிய மணவா ளன்ற
னகத்துவந் தடையு மான்மக்
கழிதுயர்க் கிரங்கிச் சிந்துங்
கண்ணி னீர்த் தாரை போலும்

தோன்றின.

பாபத்தின் துன்பங்களை அனுபவிக்கத் தீர்மானித்தார் இயேசு. தனி இட மொன்றிலே அமர்ந்தார். பாரபக்ஷமில்லாத ‘கர்த்தர்’—இயேசுவின் தாதை—பாவத்தின் தண்டனையாக—‘தீதிப் பட்டயம்.’ ‘கனல்’; ‘மேகம்’; ‘மின்னல்’; முதலியவற்றை அனுப்பி “இப்பாருக் கின்பம் வழங்குவான் றுணிந்து வந்த மாதவேலா”கிய இயேசுவை வருத்தத் தொடங்கினார்.

ஒருவாறு தேவலோக வர்ணனையின் எல்லையையும் தாண்டியது மோக்ஷ சாம்ராஜ்யம். அத்தகைய உயர் பதவியையும் மக்களுக்காகத் துறந்துவந்தார் இயேசு.

கன்னி மரியாளின் கர்ப்பப் பையிலே உழன்று, மானிடரின் கஷ்டங்களை நீக்க தாழ்வான மனிதப் பிறவியைக் கொண்டார்.

தனக்கென இல்லாமல்—சுயநல மற்று, பல விடங்களிலும் அலைந்து-திரிந்து ஏழையாகக் கஷ்டப்பட்டார். யாவும் மனிதரின் பாபங்களைப் போக்க வேண்டுமென்ற அந்த 'ஒரே' நோக்கத்தால்தான்.

"வாக்கினுக் கதீத மான
மகிமையை யிழந்தன், கன்னி
பாக்கிய வயிற்றிற் கர்ப்பப்
பையுளே பழங்க லுற்றும்,
ஆக்கமற் றேழை யாகி
யலைந்துஞ்சற் றவியா தோங்கி
மீக்கிளர் தேவ நீதி
வெந்தழல் குளிப்ப தானார்."

ஆன்ம துன்பம் அவரை அண்மியது. ஆத்ம வேதனை அவரை வாட்டியது. துடிதுடித்தது அவரது தூய உள்ளம். அவரது 'இதயம்' உருகி குடரினாப்பன் சிந்தியது. நித்ய ஜீவன் ததும்பும் 'சுவிசேஷங்கள்' நிறைந்த அவர் வாய் உலர்ந்தது. உடம்பிலே கிருமிகள் நிறைந்தன. கெந்தக நாற்றம் வீசிற்று அவ்வுடம்பு.

இயேசு முடிவில்—சப்திக்கிற தீயின் நடுவிலிட்ட மலர் மாலையைப் போலும்; அலைமோதுகிற கடலின் நடுவே யகப்பட்ட துரும்புபோலும்; கஷ்டப்பட்டார்.

"முழங்கெரி நடுவ ணுய்த்த
முருகுலா மலங்கல் போலுந்
தழங்குவெண் டிரைவா யுற்றுத்
தளர்ந்துழல் திரணம் போலும்,"

தாங்கரியா இடுக்கண்களை அனுபவித்து, மக்களைப் புனிதராக்கினார் இயேசு. ஆனால் நன்றிகெட்ட இவ்வுலகம் சிந்தித்ததா அதை? பாபத்தை வளர்ப்பதிலேயே கருத்தைச் செலுத்தியது. 'முன்னேற்ற'மெனக் கூறி, நாகரீகத்தை வளர்த்தது. அதன் பயன்தான் விஞ்ஞானம். விஞ்ஞானத்தின் உருவே நிகழ்கால யுத்தம்.

உலகே!......நின்னை அமிழ்த்திக் கொண்டிருக்கும் பாபச் சுமை எத்துணை பெரிதென உணர்கின்றாயா......? அதைக் கரைக்கும் உபாயத்தை இன்னும் சிந்திக்கவில்லையே நீ! அட! பாப உலகமே!!......

# காதல் பந்தம்

(எஸ். சுப்ரமணியம், எம். ஏ.,)

இராஜேந்திரன் ஓர் ஆர்வம் மிக்க உண்மைக் காதலன். எப்பொழுதும் மோகனாவின் நினைவாகவே இருந்தான். "ஆ! இவள் பேரழகு யாவரைத்தான் சலிக்காது? இவளழகைக் கண்ட எந்த ஆடவன் தான் இவள் மையலில் ஆழாது இருப்பான்? மலர் சூடிய கருநிறக் குழலும், இரத்தினக் குழையணிந்த காதும், புன்னகை தவழும் மென் மலர் முகமும், வெருண்ட விழியும், துவண்ட இடையும், மிளிர்ந்த உடையுமாகக் காணப்பெறும் இவள் அழகு தான் என்னே! இவளது கரிய விழிகளும், ஒளிய முகமும், குயிலினுமினிய தீங்குரலோசையும் என்னை உண்மையில் அடிமையாக்கி விட்டன. அவள் முன்னர் என்னுடன் விளையாடி வந்தனளே. இப்பொழுது என்னுடன் பேசுவது கூட இல்லையே. ஏன்? ............என்ன தான் இருந்தாலும் நான் வறிய குடியிற் பிறந்தவன். அவளோ ஒரு சீமாட்டி. அப்படியிருக்க அவளது தந்தை எனக்கு மணம் செய்விப்பாரோ?" என்று தன் மனம் போனவாறெல்லாம் எண்ணிக் கொண்டிருந்தான் இராஜேந்திரன். அவன் மனம்! மோகனாவினிடமே லயித்திருந்தது. இரவு முழுவதும் அவள் நினைவே அவனுக்கு இருந்து வந்ததால் நித்திராதேவி அவனைவிட்டு அகன்றாள். பழைய நினைவுகள் அவன் மனக் கண்முன் அடிக்கடி தோன்றின.

## 2

இராஜேந்திரனும் மோகனாவும் வெகு நாளாக அண்டை வீட்டுக்காரர்கள். சிறு குழந்தைகளா யிருந்த காலத்தில்—மனம் தீ நெறிச் செல்லாத அப்பொழுது—அவர்களிருவரும் விளையாடுவது வழக்கம். 'கணவன் மனைவி' விளையாட்டுக்கள் கூட விளையாடி யிருக்கின்றனர்! அப்பொழுது அவற்றை வெறும் விளையாட்டுக்களாகவே அவர்கள் கருதி வந்தனர். குழந்தைக ளிடையில் இயற்கையாக உண்டாகும் பூசல்கள் இவர்கள் இடையே இல்லை. எப்பொழுதும் அன்பென்னும் பாசத்தால் பிணிக்கப்பட் டிருந்தனர்.

நாளுக்கு நாள் மோகனாவின் அழகு வளர்ந்து கொண்டே வந்தது. "வானிலிருக்கும் அரமங்கையருள் ஒருத்தி புவியில் இறங்கினாற்போலன்றோ காண்கிறாள் இவள்?" என்று அடிக்கடி கூறித் தனக்குத் தானே மகிழ்வான் இராஜேந்திரன். அவனை யறியாமலே அவளிடம் அவனுக்குக் காதல் உண்டாயிற்று. அவளும் அவனைக் காதலித்தாள். எல்லாம் பருவக் கோளாறு!

## 3

பேதை, பெதும்பைப் பருவங்களைக் கடந்து மங்கைப் பருவமுற்றாள் நங்கை மோகனா. இப்பொழுது அவள் வீட்டு வாசற்படிப்பக்கம் கூட வருவதில்லை. இராஜேந்திரனுக்கு அவள் தரிசனமின்றி ஒரு நாள் கழிவது ஒரு யுகமாகவே இருந்தது. அல்லும் பகலும் அவள் நினைவாகவே இருந்தான்.

ஒரு நாள் இரவு பத்து மணியிருக்கும். இராஜேந்திரன் தன் படுக்கையறையில் உலவிக்கொண்டு இருந்தான். அவன் நினைவு முழுவதும் மோகனாவின் மீதே இருந்தது. தன் மனக் கண்முன் தன் காதலியின் உருவத்தையே கண்டான். எங்கு திரும்பினும் அவள் உருவமே அவன் முன் நின்றது. காதல் பேயால் பீடிக்கப்பட்ட அவன் தன் மெய் நிலையையே மறந்தான். கள் குடித்தவனைப் போன்று அவன் செய்கைகள் அவன் வசமாயில்லை. பைத்தியக்காரனைப் போல் தானே பேசுவன். தானே சிரிப்பன். தானே பாடுவன். படுக்கையிற் சென்று படுப்பன். மறுபடியும் எழுவன். இங்ஙனம் பல முறை படுத்தும் எழுவதுமாக இருந்தான். வேலையொன்றுமில்லாத பித்தன் போல் அறை முழுவதும் சுற்றினான்.

இப்படி அறையைச் சுற்றி வரும்பொழுது, "இந்த ஜன்னற் கதவை இவ்வளவு நாளாகத் திறந்து பார்த்ததே இல்லையே" என்று சொல்லிக்கொண்டே ஒரு ஜன்னற் கதவைத் திறந்தான். ஆஹா! அங்கு அவன் கண்ட காட்சிதான் என்ன! முனிவரும் மருளும் முகாரவிந்தத்தினையுடைய மோகனா அறிதுயிலுற்றுக் கிடந்தாள்!

"மோகனா, மோகனா," என்று மெல்லிய குரலில் அவளைக் கூப்பிட்டான். ஆடவர் ஒருவர் குரல் தன் படுக்கை யறையினின்றும் எழுவதைச் செவியுற்றுத் திடுக்கிட்டு எழுந்தாள் மோகனா. ஜன்னலண்டை தோன்றிய அதிரூப சுந்தரனைக் கண்ணுற்றாள். தன் காதலன் இராஜேந்திரன் என அறிந்து தெளிந்தாள். இருவர் கண்களும் சந்தித்தன. சம்பாஷித்தன. கிட்டே வரும்படி அவன் சைகை செய்தான். அவளும் ஜன்னலண்டை வந்தாள். ஒருவர் கையை ஒருவர் முத்தமிட்டனர்.

"மோகனா, என்னை மறந்து விடவில்லையே?" என்று கேட்டான் இராஜேந்திரன்.

"காதல, தங்களை என்றும் மறவேன்," என்றாள் மோகனா.

"என்னை நீ மணம் புரிவாயா? உன் தகப்பனார் நம் மணத்திற்கு இசைவாரா?" என்று அவன் வினவினான்.

"ஆ கடவுளே!" என்று கூறி மூர்ச்சித்தாள் மோகனா. சிறிது நேரம் சென்று உணர்ச்சி பெற்று எழுந்தாள். "நான் என்ன சொல்வேன்? என் தந்தையார் பக்கத்துக் கிராமத்திலுள்ள மிராசுதார் குமாரர் ஒருவருக்கு என்னை மணம் புரிவிக்கப் போகிறாராம். என்ன செய்வது?" என்று துக்கித்தாள் மோகனா.

"உன்னையே நம்பியிருந்த என்னைக் கைவிடல் நியாயமா?" என்றான் இராஜேந்திரன்.

"யாது வரினும் நான் உம்மைத் தவிர வேறொருவரையும் மணப்பதில்லை" என்றாள் மோகனா.

"அது எங்ஙனம் இயலும்?" என்று கேட்டான் அவன்.

"கடவுள் கிருபையால் நம் எண்ணம் கைகூடும்" என்றாள் அவள்.

இங்ஙனம் சிறிது நேரம் இருவரும் எழில் பெற உரையாடி இன்புற்றிருந்தனர். பின்னர் கதவை மூடிவிட்டுத் தத்தம் படுக்கைக்குச் சென்றனர்.

## 4

தினம் இரவு பத்து மணிக்குமேல்—அரவம் சிறிது மில்லாத அக்காலத்தில்—அவ் விருவரும் இங்ஙனமே ஒருவருக்கும் தெரியாமல் உரையாடி வந்தனர். மோகனா கடை விழி நோக்கினால் காதலனைப் பன் முறை நோக்கிக் களிப்பாள். பொற்கொடி யெனப் பொலிவுற்ற அவ் விளங்கோதையின் வனப்பை யெல்லாம் எறனையான் இராஜேந்திரன் இரு விழிகளாலும் வாரி வாரி யுண்பான்.

நாட்கள் பல கடந்தன. மோகனாவுக்கும் பக்கத்துக் கிராமத்திலிருக்கும் மிராசுதார் குமாரருக்கும் விவாகம் நிச்சயமாகி முகூர்த்த நாளும் குறித்தாயிற்று.

கலியாணத்திற்கு இரண்டே நாட்கள் தான் இருந்தன. இரவு பத்து மணி யிருக்கும். "எங்ஙனம் நம் காதல் முற்றுப் பெறுமோ?" என்ற கேள்வி காதலர்கள் மனத்தை யறுத்தது. அவர்களிருவரும் துக்க சாகரத்தில் ஆழ்ந்திருந்தனர்.

"மோகனா, இன்னும் இரண்டு நாட்களில் நீ அவரை மணந்துகொண்டு விடுவாயே! நான் இலவுகாத்த கிளிபோலல்லவா ஆகி விடுவேன்?" என்றான் இராஜேந்திரன்.

"காதல, என்னாலாவது ஒன்றில்லை. நான் என் பெற்றோரின் கட்டாயத்தால் அவரை மணப்பினும் தங்கள் மனைவியே," என்றாள் மோகனா.

"ஏன், நாம் நள்ளிரவிலேயே எங்கேயாவது ஓடிப்போய் விடக் கூடாது?" என்று கேட்டான் இராஜேந்திரன்.

"ஓடிப் போகலாம். ஆனால் எங்கே போவது? சாப்பாட்டிற்கு என்ன செய்வது?" என்று கேட்டாள் மோகனா.

"காட்டைத் தாண்டிப் பக்கத்துக் கிராமத்திற்குச் சென்று விடுவோம். என்னிடமும் கொஞ்சம் பணம் இருக்கிறது. உன்னிடமும் சில நகைகள் இருக்கின்றன" என்றான் இராஜேந்திரன்.

"சரி, நாமிருவரும் இங்கே யிருந்தே ஒன்றாகச் சேர்ந்து செல்லின் எவரேனும் ஐயுறுவர். ஆதலின் நாளைக் காலையிலேயே எல்லாவற்றையும் தயாராக எடுத்துவைத்துக் கொண்டு நாளை இரவு பத்து மணிக்கு அக்காட்டிலுள்ள பெரிய ஆலயத்தினடியில் நாம் சந்திப்போம்," என்றாள் மோகனா.

"அப்படியே ஆகட்டும்," என இராஜேந்திரனும் சம்மதித்தான்.

## 5

பயங்கரமான இருண்ட காடு-முழுதும் உறங்கும் காரிருள்-வானில் மீன்களும் ஒளி செய்யவில்லை. கரு மேகங்கள் வானில் கவிந்தன. புலியின் கர்ச்சனையும், கரடியின் உறுமலும், காட்டுப் பூனைகளின் சப்தமும் ஆங்காங்கே கேட்டன.

மருண்ட நோக்கும் வெருண்ட விழியும் உள்ள ஒரு காரிகையின் உருவம் பெருத்த ஆலமரம் ஒன்றனடியில் தென்பட்டது. காதல் என்னும் ஆசையால் உந்தப்பட்ட அவள் இரவு ஒன்பது மணிக்கெல்லாம் அவ்விடத்

தை வந்தடைந்தாள். தன் காதலன் வருகையை ஆவலுடன் நோக்கிய வண்ணமாய் இருந்தாள் மோகனா. தூரத்தில் தன்னை நோக்கி யாரோ ஒருவர் வருவதுபோல் அவளுக்குத் தோன்றியது. தன் காதலன் இராஜேந்திரனாகத்தான் இருக்கவேண்டும் என்று நினைத்தாள். சற்று உற்று நோக்கினாள். ஆ! அது ஒரு புலி! தன்னை நோக்கி அது பாய்ந்து வருவதைக் கண்ணுற்றாள். உயிருக்குப் பயந்து ஓட்டமெடுக்கலானாள். ஆனால் அதோ அவள் பக்கத்தில் வந்துவிட்டது. ஆம்; அவள் தாவணியைப் பிடித்துவிட்டது. என் செய்வாள் மெல்லியலாள்! 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போகட்டும்' எனக் கருதித் தன் தாவணியை அவிழ்த்துவிட்டு விட்டு வேகமாக ஓடினாள் மோகனா. பயத்தினால் பின்பக்கம் திரும்பிப் பாராமலே வெகு தூரம் ஓடிவிட்டாள். புலியோ அவளைப் பிடித்து விட்டதாகவே நினைத்து நின்றுவிட்டது. என்ன செய்வதென்றே மோகனாவுக்குத் தெரியவில்லை. சட்டென்று 'புலி மரத்தில் ஏறாது' என்று ஞாபகம் அவளுக்கு வந்தது. உடனே அருகே யிருந்த மரம் ஒன்றில் அவள் ஏறிக்கொண்டாள்,

"கைக் கெட்டியது வாய்க் கெட்டவில்லையே" என ஏமாந்த புலி சிறிது நேரம் சென்று வேறெங்கேயோ இரை தேடச் சென்றுவிட்டது.

சரியாகப் பத்து மணிக்கு இராஜேந்திரன் ஆலமரத்தை யடைந்தான். சிறிது தூரத்தில் மோகனாவின் தாவணி யிருப்பதைக் கண்டு அச்சமுற்றான். "ஆ! அவளுக்கு என்ன நேர்ந்திருக்கும்? காட்டு மிருகங்கள் அவளைக் கொன்றுவிட்டனவா?" என்று திடுக்கிட்டான். அத்தாவணியைக் கையிலெடுத்தான். அதில் இரத்தக் கறை யிருப்பதைக் கண்டான். கலங்கினான். கலுழ்ந்தான். எழுந்தான். விழுந்தான். அறிவழிந்தான். தன்னை மறந்தான். மீட்டும் அறிவுகூடி எழுந்தான். "ஆம், அவளைக் காட்டு மிருகங்கள்தான் கொன்றுவிட்டன" என்று கதறினான். அப்புலி மோகனாவைத் தூரத்துவதற்கு முன் ஒரு மாட்டைக் கொன்றிருந்த தென்றும், அவ்விரத்தக் கறை அம்மாட்டினுடையதே யென்றும் அவனறிவானா? பாவம்!

தன் காதலி இறந்த பின்னர் உலகமே சூன்யம்போல அவனுக்குத் தோன்றியது. "ஆ மோகனா! என்னை விட்டுப் பிரிய உனக்கு மனம் வந்ததா? உயிரிழக்கும் சமயத்தில் என்னை நினைத்து நினைத்து ஆற்றினாயோ? காதலி, நாமிருவரும் சிறு வயது முதற்கொண்டு மிகவும் நேசமாக இருந்து வந்தோமே. அதைக் கண்ட கடவுளுக்கும் பொறாமை யுண்டாகிவிட்டது போலும்! நீ போன பின் எழில்மிகு இவ்வுலகம் பாலைவனமாகவே எனக்குத் தோன்றுகிறது. உன்னைப் பிரிந்து ஒரு கணமும் நான் உயிர் தரியேன். இனி நான் இருந்து என்ன பயன்?" என்று ஓலமிட்டலறி அவ்வாலமரத்தின் மீது தன் தலையைப் பலமாக மோதினான். மண்டை பிளந்தது. உயிரும் அகன்றது.

சின்னேரம் சென்றது. மோகனா 'தன் காதலர் வந்திருப்பார்' என நினைத்து ஆலமரத்தடியை அடைந்தாள். சவத்தைக் கண்டு திடுக்கிட்டாள். காதலனை உற்று நோக்கினாள். பற்றித் தூக்கினாள். தன் மார்பில் ஏற்றித் தாக்கினாள். அவனை வாரியணைத்தாள். பெரிதும் வாய்விடுத்து அழுதாற்றினாள். "காதலா இங்ஙனம் என்னை விட்டுப் பிரிதல் நியாயமா? நம் காத

# பெண்களும் அலங்காரமும்

"தொண்டன்"

தற்கால நாகரீகத்திற் கேற்ப கல்வி கேள்விகளில் தேர்ச்சிபெற்று, இல்லறத்தை நல்லறமாய் நடாத்தி, இல்லம்தோறும் இலக்குமிகளாக விளங்கும் நம் பெண்மணிகள், இடைக்கால பொழுதுகளில் கிட்டும் ஓய்வு நேரங்களை, மற்றைக் கர்நாடகப் பெண்களே போல் தாயம் முதலியன ஆடியோ, துயின்றோ போக்காது; தம் தம் கலை தேர்ச்சியைத் தெற்றெனப் புலப்படுத்தும் பற்பல சித்திரங்கள் வரைவதிலோ, அட்டை நூல் முதலியன கொண்டு நேர்த்திமிக்கக் காட்சிகள் பல புனைவதிலோ செலுத்துவது யாவரு மறிந்த தொன்றேயாம். அழகு அல்லது அலங்காரம் என்பது மாந்தரின் மனதைக் கவரும் ஓர் தனிக் கலை யென்பதிலும் அக்கலையைப் போற்றி வளர்த்தல் மக்கள் ஒவ்வொருவருடையவும் கடமையென்பதிலும் சிறிதும் ஐயமிலதாயினும், இற்றை நாட்களில் நம் பெண்மணிகள் இத்துறையில் ஈடுபட்டுள்ள முறையினையும், இக் கலையை மேலும் பயனுறு முறைகளில் கையாளும் வகைகளையும் ஈண்டு சற்றே விளக்குவதே இக் கட்டுரையின் கருத்தாம்.

கலைகளின் நோக்கம் அறிவு வளர்ச்சியே. ஆயினும் நமது பெண்மணிகள் இதனைக் கையாளுதல் தம் பொழுதைப் போக்கும் எண்ணத்துடனேயே யன்றி வேறல்ல. இருப்பினும், சில மாதர்கள் இவ்வேலைப்பாடுகளிலுள்ள ஆசை மிகுதியால், தம் தம் குடும்ப காரியங்களிலும் போதிய கவனம் செலுத்தாமல் நேரம் முழுதையும் இதிலேயே போக்கிவருவது முண்டு. இது மிகவும் வருந்தற்பாலது. மற்றும் சில மங்கையர்கள் தம் குடும்ப வருவாய்க்கும் மிஞ்சி இப் பொழுது போக்குக் கலைக்குத் தேவையான வெல்வெட்டு, சட்டம், அட்டை, நூல் முதலிய பொருள்கள் வாங்கச் செலவழிக்கின்றனர். அந்தோ! பேதமை! கணவன் பாடுபட்டுத் தேடி வரும் பொருளை வீண் செய்யாது உகந்த வழிகளில் செலவழித்துக் கணவனையும் மக்களையும் போஷித்துச் செம்மையாக இல்லறத்தை நடத்துவது

---

லைக் கண்டு காட்டு மிருகங்கள்கூட பொறாமை கொண்டு உம்மைக் கொன்று விட்டனவே! காரிருளில் கானகத்தே காதலியைக் கைவிட்டுச் சென்றது என்?" என்று பலவாறாக அரற்றி, 'உயிர் போனபின் உடலுக்கு இங்கு என்ன வேலை?' எனக் கருதி அதே ஆலமரத்தின்மேல் தன் தலையை மோதிக் கொண்டு தானும் உயிர் நீத்தாள். இருவர் குருதியும் ஒரே ஆற்று வெள்ளமாக ஓடியது.

அம்மரத்தின் மீது இதுவரை உட்கார்ந்திருந்த ஆந்தை யொன்று இந்தக் கோரக் காட்சியைக் கண்டு சகியாததுபோல 'கிரீச்', 'கிரீச்' என்று அலறிக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் பறந்தோடியது.

['Ovid' என்னும் ரோமானிய மகா கவி எழுதிய 'Metamorphosis" என்னும் நூலிலுள்ள ஒரு கதையைத் தழுவியது.]

பெண்டிரின் முதற் கடமை யென்பதை இவர்கள் உணர்ந்தனரில்லை போலும்.

நிற்க, நாம் இவ்வலங்காரங்களைச் செய்வதின் நோக்கம் கேவலம் வீட்டை அலங்கரிப்பது மட்டுமன்றிப் பின்னுமொரு பயனைக் கொண்டிருத்தல் தங்கத் தாமரை மணம் பெற்றதே போன்று விளங்கா நிற்கும். அஃது என்னை யென்று சற்று கவனிப்பாம்.

நமது நங்கையர்கள் சாதாரணமாக வலை அட்டைகளில் வர்ண நூல்களைக் கொண்டு நாய், பூனை, பையன், பங்களா என்று ஏதாவது சித்திரித்து கண்ணாடியும் சட்டமும் இட்டு மாட்டுவது வழக்கம். அவ்வாறு வரைவதற்குப் பதிலாகச் சுற்றிலும் பூக்கள் கொடிகள் முதலியன வரைந்து எல்லை (Border) கட்டி நடுவிலுள்ள இடை வெளியில் அடியார்களின் பக்தி ரஸம் ததும்பும் பாடல்களையேனும் பாரதியார் போன்றவரின் வீர ரச மூட்டும் பாட்டுகளையேனும் வர்ண நூலினாலேயே சித்திரிப்பது சாலவும் நன்மை பயக்கும். நமது இல்லங்களுக்கு வருவோர் இப்படங்களைக் கண்ணுற்றுக் கண் குளிர ஆனந்தமடைவதுடன் அவற்றின்கண் பொறிக்கப்பட்டுள்ள உபதேசங்களையோ பாடல்களையோ கண்டும் பயனடைய முற்படுவர்.

மேலும், நம்மில் பலர் வீட்டை அலங்கரிப்பதன் பொருட்டு வாங்கும் கண்ணாடிப் படங்களில் கடவுள் படங்களுடன் நில்லாது சினிமா நடிகளின் படங்களையும் சிருங்கார ரஸத்தை வெளிப்படுத்தும் ஆபாசப் படங்களையும் வாங்குவது கண்கூடு. என்னே! இவர்கள் மதி சென்றவாறு! இத்தகைய சித்திரங்களைக் கண்ணுறும் கண்ணியம் மிக்க வயோதிகர்கள் அவமதிப்பு அடைகின்றனர். வாலிபர்கள் மனோவிகாரம் அடைகின்றனர். இவ்வாறு பணத்தையும் வீணாக்கிக் காண்போரின் கண்களைக் கறைப்படுத்துவதைக் காட்டிலும் மஹாத்மா காந்தி, ஜவாஹர்லால் நேரு, இராமகிருஷ்ண பரமஹம்ஸா, சுவாமி விவேகாநந்தா முதலிய பெரியோர்களின் படங்களை வாங்கி மாட்டுவது எத்துணையோ நன்மையன்றோ? இப்படங்கள் நோக்குழி நம் மனத்தகத்து "என்னே இவர்களின் மாண்பு! நாமும் இவர்களைப் போன்று கடவுளை வழிபட்டு முக்தி பெறுவோமாக" என்னும் உணர்ச்சி தோன்றாமற் போமா?

நம் பாரத நாட்டு இளம் சகோதரிகள், யாம் ஈண்டு வரைந்துள்ளவற்றை நன்கு ஆராய்ந்து அவற்றின்கண் நன்மை பயப்பனவற்றையும் சாத்தியமானவற்றையும் நடைமுறையில் கொணர்ந்து என்றென்றும் புகழ் பெறுவார்களாக.

வாழ்க கலைவாணி!

---



# விருந்து

(மு. த. வேலாயுதம்.)

விருந்தென்பது இவ் வாழ்க்கையிற் கட்டாயமாய் அனுசரிக்கப்படுவ தொன்றும். முற்காலத்தில் இல்லறம் நடாத்தும் எழில் சேர் மக்கள் ஒவ்வொருவரும் விருந்து என்பதை நன்குணர்ந்து வந்தனர். இல் வாழ்க்கையில் விருந்தை வள்ளுவனர் எவ்வாறு சிறப்பித்துக் காட்டுகின்றார் என்பதை நன்குணரலாம்.

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்

கைம்புலத்தா றோம்பல் தலை'

என்னும் குறளே போதிய சான்றும்.

விருந்தென்பது சிலர் நினைப்பது போல் சொந்தக்காரர், நேயர் முதலியோரை உபசரிப்பதல்ல. புதிதாய் வருபவரே விருந்தினராவர். பரிமேலழகியார் "விருந்தென்பது புதுமை ; அஃது ஈண்டாகு பெயராய் புதிதாய் வந்தார் மேனின்றது' எனக் கூறுதலைக் காண்க. ஆதலின், விருந்தினர் என்போர் புதிதாய் நம்மகத்திற்கு வருபவர் என்பது புலனாகிறது.

பண்டைத் தமிழர்கள் இல்லறங்கட்கு முதலாயது விருந்தெனக் கண்டனர். திருக்குறளிற் காணும் 'விருந்தோம்பல்' என்னும் அதிகாரமே போதிய சான்றும்.

செல்வம் பெற்றதாற் பயனென்ன ? நச்சு மரம்போல் பயன் தாராவாளா இருத்தலோ? அல்லது, தான் மாத்திரம் உண்டு உடுத்து போக பாக்கியங்களெனச் சொல்லும் புன்வாழ்விற் றிளைத்தலோ? அற்றன்று. செல்வத்தாற்பெற்ற பயன் தானும் அனுபவித்துப் பிறர்க்கும் ஈய்ந்து வாழ்க்கை நடாத்துதலே. செல்வர்களின் பெருந் தன்மையைக் கூறவந்த புலவரொருவர்,

'படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்

உடைப் பெருஞ் செல்வர்'

என்றெடுத்துக் காட்டுகின்றார். இதனால் பண்புடைச் செல்வர்கள் எவ்வாறு சமுதாய வாழ்க்கையிற் பங்கெடுத்துக்கொண்டு இல்லற வாழ்க்கை நடத்த முற்பட்டனர் என்பதைக் காணலாம்.

விருந்தினரை உபசரித்து ஓம்புதலில் உலகத்திலுள்ள எத் தேயங்களினும் நந்தமிழகம் தலையாயது. வள்ளுவர், இளங்கோ முதலியோ ரனைவரும் நந்தமிழ் நாட்டில் நடை பெற்ற விருந்தைச் சிறப்பித்துள்ளனர்.

நல்விருந்தோம்புவோர் அகமகிழ்வுடன் பண்புசால் குணங்களைப் பெற்றோராவர். அன்பும், கருணையும், இரக்கமும் அவர்களிடம் குடிபெறும். விருந்து வரவில்லையே என்ற ஏக்கத்தில் ஒரு சமயம் வாடி யிருப்பரே

யொழிய விருந்தை ஒருவாற்றானும் புறக்கணித்ததுண்டோ? இல்லவே இல்லை என்பதை அறுதியிட்டுக் கூறலாம்.

விருந்தோம்புதலிலும் அன்பு நிலவவேண்டும். இவ்வன்பு சிறிதள வேனுந் தவறுமாயின் விருந்தினர் முகம் வாடும். அனிச்ச மலர் எவ்வாறு முகரும் பொழுதே குழைகின்றதோ அத் தன்மைத்தே அன்பு குறைந்த பார்வையில் விருந்தினர் முகமும் மாறுபடும்.

'மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.'

ஆதலால், எத்தகைய அன்புடன் விருந்தோம்பல் நடத்தப்பெற்றதென் பதை உணரலாம்.

கோவலன் கண்ணகியைப் பார்த்துத் தான் செய்த அடாத செய்கை களைக் கூறி இரங்குகின்றான். 'வெய்ய சுரத்தில் நடந்து வந்ததைப் பெற் றோர் காணின் கண்ணீர் சொரிவரே. சிறியளாகிய உனக்குப் பற்பல விதத்தும் இன்னல் இழைத்தேனே' எனக் கவல்கின்றான். கண்ணகியோ அதற்கு மாற்றமாக 'அன்புடையீர்! வருந்தல் வேண்டாம்.

'அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்'

துறந்த யான் உமது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கக் கடப்பாடு உடை யேன்' என நவில்கின்றாள்.

என்னே கண்ணகியின் கற்பு! இப் பொற்புடைய கற்புடையாள் 'விருந்தெதிர் கோடல்' பெற்றேனில்லை என்று வருந்துகின்றாள். இல் வாழ்க்கையிற் செய்ய வேண்டிய கடமைகளில் விருந்தோம்பல் மிகச் சிறப் புடைத்தென்று கருதுவதாய் இளங்கோவடிகள் இசைக்கின்றார். எனவே, நிலைமையிற் பிறழ்ச்சியடைந்த காலத்தும், தமிழ்நாட்டுக் கற்பரசி விருந் தோம்பலைக் கண்ணே போல் போற்றுவதை நோக்குழி நாம் பெருங்குடி யிற் றோன்றியவ ரென்பதைச் சொல்லுதற் கிழுக்குளதோ?

கற்பின் இலக்கணத்தைக் கூறவந்த தொல்காப்பியர்,

'கற்புங்காமமு நற்பா லொழுக்கமு
மெல்லியற் பொறையு நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலுஞ் சுற்ற மோம்பலும்
பிறவுமன்ன கிழவோள் மாண்புகள்'

என்பதனால் நன்குணரலாம்.

பரத்தையிற் பிரிந்த தலைவன், தலைவியைக் காண வருகின்றான். தலைவி தலைவன் வருகையை உணர்ந்து புலத்தல் செய்கிறாள். தலைவன் தலை வியைச் சேர முடியவில்லை. பாணன் மூலமாகத் தன் விருப்பத்தைத் தெரி வித்துக் கொள்ள முயற்சிக்கிறான். ஆனால் தலைவனுக்காக வந்த பாணனும்

விரட்டப் பெறுகின்றான். தலைவன் தலைவியின் சிற்றத்தை யுணர்ந்து விறலி மூலமாக வேனும் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்றெண்ணி விறலியைத் தூது விடுகின்றான். தலைவியோ விறலியையும் அனுமதித்தாளில்லை. இவற்றைக் கண்ட தலைவன் மனம் நெகிழ்ந்தது. இருப்பினும் ஒருவாறு தன்னையே தேற்றிக்கொண்டான். இறைவியின் பண்பும் நுண்ணறிவும் தெள்ளிதின் அறிந்தோனாதலால் எவ்விதம் அமுதனைய அணங்கின்வாயிற் செல்லலாம் என்றெண்ணினான்.

தன் மனையாட்டி கற்பிற் பொற்புடையவளாதலால்—இல்லறத்திற்றலை சிறந்தவளாதலால் விருந்தினர் ஒருவருடன் செல்ல எண்ணினான். அங்ஙனம் சென்றால், விருந்தினரை அன்புடன் வரவேற்றுபசரிக்கு முகத்தான், தானும் அவருடன் முட்டின்றிச் செல்வதற்கேதாகும் எனக் கண்டான். அவ்வாறே விருந்தினரொடு தலைவியின் இல்லமடைந்தான். விருந்தினருடன் தலைவர் வந்ததைத் தலைவியிடம் கூற ஓடினான் உயிர்ப் பாங்கி. தலைவியைக் கண்டான். 'அம்மா! விருந்தினருடன் தலைவர் வந்திருக்கிறார்' என்று சொல்வதற்கு 'விருந்தினர்....................' என்று வாயெடுத்தாள். உடனே தலைவிக்குப் புன் முறுவல் பூத்தது. தலைவன் பரத்தையிற் பிரிந்த கோபத்தால் நெற்றியிற் பாய்ந்தோடிய புருவங்கள், இப்போது தம் நிலைமைக்கு வந்தன. சிற்றத்தாற் சிவந்த மேனி முன் போல் பசு மேனியாயிற்று. கண்ணீர் வடித்த அக்காரிகை அன்பின் பெருக்கால் ஆனந்தக் கண்ணீர் வடிக்கின்றாள். தலைவன் உட் செல்லுகின்றான். விருந்தோடு வந்ததால் தலைவி பொறுத்தது கண்டு இறையோன் மகிழ்கின்றான். இதைத் திருவாரூர்க் கோவையில்,

> 'புற்றி லரவணி யாரூர்த் தியாகர் பொதிய வெற்பிற்
> சுற்றிய நல்விருந் தென்றனவே நகை தோற்றியது
> நெற்றியி லோடும் புருவம் முன்போல நிமிர்ந்தனமேற்
> பற்றிய செம்மையும் கண்ணீரும் போயின பைந்தொடிக்கே'

என 'விருந்தொடு வந்துழிப் பொறுத்தது கண்டு இறையோன் மகிழ்தல்' என்னுந் துறையிற் காணலாம்.

எனவே, பாணன், விறலி இவர்கள் தூதினாலும் தலைவி சிற்றம் தணிந்தாளில்லை. பாங்கி விருந்தொடு என்று சொன்ன மாத்திரத்திலேயே சிற்றம் மறைந்து அன்புகொண்டு புன்னகை பூத்தாளெனின் விருந்தினரை எவ்வாறு போற்றி வந்தனர் பண்டையோர் என்பதை நன்குணரலாம்.

தமிழர் தம் தொல்சீர் பண்பு நல்விருந்தோம்ப லன்றோ?



# ஏழ்மையின் தாழ்மை

(ந. வெங்கடராமன்.)

காலை நேரம். 'டாங், டாங்' என்ற ஒலி காதைத் துளைத்தது. பிரம்மாண்டமான அந்த கோபுரத்தி னுச்சியில் தென்படுகின்ற கடிகாரத்தின் ஒலிதான் அது. அப்போது மணி பத்து. பகலவன் தனது கதிரொளியை ஞாலத்தின் மீது நன்றாகப் பரப்பி யிருந்தான். அவனுக்கு எதிர்ப்பட்ட கருமேகங்கள் வெள்ளிப்பாளங்களாகிக் கொண்டிருந்தன. உலகம் தனது உறக்கத்திலிருந்து எழுந்து சுறுசுறுப்புடன் வேலை செய்து கொண்டிருந்தது.

வியாபாரி பண்டங்களை வாங்குவோரிடம் தொழிலுக்கேற்ப இன்முகத்துடன் பற்பல விதமாக அதிசயத்துடன் உரையாடிக் கொண்டிருக்கவும், அரசாங்க ஊழியர்கள் ஆடம்பரமாக உடையணிந்து அவசர அவசரமாகத் தத்தம் தொழில்களைச் செய்யச் செல்லவும், செல்வச் செருக்குற்றோர் பிறரைப்பற்றி ஒரு சிறிதும் கவனியாதவராய்த் தங்களது வண்டிகளில் அதிவேகத்துடன் கவலையற்று செல்லவும், அரசாங்க சேவகன் போவோர் வருவோருக்கு வழிகாட்டுவான் பொருட்டுக் கையை இப்படியும் அப்படியும் சமயத்திற் கேற்றாற்போல் சமிக்ஞை செய்துகொண்டிருக்கவும், மோசக்காரர்களும் திருடர்களும் யார் எக்காலத்து ஏமார்ந்து இருப்பார்களென்று ஏங்கி ஏங்கி வட்டமிட்டுக் கொண்டிருக்கவும், செல்வர்கள் பேராசையால் செல்வத்தை இன்னும் எப்படி சேர்ப்பது என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கவும் அப்போதைய நேரம் கழிந்து கொண்டிருந்தது.

நமது பார்வையை இனி அதோ! அங்கே தெரிகிறதே! நகரத்தின் மூலையில் உலகத்தோரால் வெறுக்கப்பட்டு ஒதுங்கிக் கிடக்கின்ற, கண்ணால் காணவும் முடியாத துன்பங்களை எண்ணிக்கையற்று அனுபவிக்கும் எளிய உடன் பிறந்தார்மேல் திருப்புவோம்.

“மாடமாளிகை யென்ன! கூடகோபுரங்க ளென்ன!” என்று கூக்குரலிட்டு வாய் கூசாது வர்ணிப்பது அங்கே செல்லாது. “நகரத்தின் அழகு தான் என்னே! நாவால் நவிலவும் முடியுமோ!” என்று கூறுவோரை அறை கூவி யழைக்கின்றேன், “சற்று இங்கு வந்து பாருங்கள், உற்றதை உரையுங்கள்” என்றுதான். “எல்லாம் நிறைந்து செல்வமும் நிறைந்துள்ள நகரமாம் அது” என்று நாக்கடிப்பாக வாய்ப்பறை சாற்றுவோர் சிறிதுநேரம் அவ்விடத்தை உற்று நோக்கட்டும். மறுமுறையும் நாத்துணிந்து விளம்புவார்களோ! தயாள சிந்தை மிகுந்த நல்லோர் பலர் வாழுமிடம் என்று மனந்துணிந்து மகிழ்ச்சியுடன் முகத்துதி செய்வோர் கண்விழித்துப் பார்க்கட்டும். பின் அவர் கூற்று என்னவோ! அறியோம்.

ஏனிப்படிக் கூற நேர்ந்தது? மனம் அவர்களைத் தாக்கிக் கூற முன் வருவதேன்? நிலைமை. அதை மாற்ற முடியுமா? இல்லையெனின் அதை விவரிக்கத்தான் முடியுமா? எழுதத்தான் முடியுமா? மனம் எவ்வாறு துணியும் அதைக் கூற?

எங்கு நோக்கினும் எளிய குடிசைகள். கதிரவன் கருணையின்றித் தாராளமாக அவைகளி னுள்ளே பிரவேசித்துக் கொண்டிருக்கின்றான்.

அவன் அவர்களைப்பற்றி எள்ளளவும் கவலை கொண்டானில்லை போலும்.
இடிந்துபோன சுவர்கள், குப்பை கூளங்கள், மேல் கூரையினின்றும் பிரிந்
தோடிய காய்ந்து கிழிந்துபோன சருகுகள், பொறுக்க முடியாத துர்நாற்
றம் இவைகளே அவ்விடத்தில் பிரசித்தமாயின. மேடு பள்ளம் பொருந்
திய பாதைகள் கற்களும் முட்களும் நிறைந்து காணப்படுகின்றன. கொசுக்
களும் ஈக்களும் அவர்களி ஞேரங்களில் குட்டை குட்டையாகச் செல்வ
தற்கு வேறு வழியின்றித் தேங்கி நின்றிருக்கும் துர்நாற்றம் வீசும் அசுத்த
மான தண்ணீரின்மேல் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கின்றன.

அரசாங்கம் அவைகளுக்கு மட்டும் அழிந்தொழிந்தது போலும்!
அவைகளைச் சுத்தம் செய்யவோ நீக்கவோ அதற்கு அக்கரை யில்லையா?
இல்லை. ஏன் இல்லை? உரிமை கூடக் கிடையாதோ? அரசாங்கத்தி லிருப்
போர் என்ன மரமா? அல்லது பகுத்தறி வில்லாதவர்களா? ஏழைகளைப்
பற்றிக் கவலையில்லையா? அது மாத்திரம் துன்ப மறியாமல் சுகமோன்
றையே கொள்ளுகிறதே! அந்த அரசாங்கம் யாரால் அமைக்கப்பெற்றது?
ஊன்றிப் பார்க்க அதற்கு நேரமில்லையா? சட்டமென்று ஒன்று மில்லையா?
நீதி ஒழிந்துதான் விட்டதோ? கேட்பவர் யாரும் இல்லைபோலும். இல்லை,
சட்டம் கூட அவர்களை எதிர்த்துதா னிருக்கிறது. ஏழைகளுக்கு ஒரு சட்
டம் தான். செல்வர்களுக்கு ஒரு சட்டம்தான். நியாய மென்பது அநியாய
மாகி அவர்களை விரோதம் பாராட்டுகிறது. நன்மைக்குப் பதில் இன்னல்களை
இழைக்கப் புகுந்து விட்டன எல்லாம். அவையனைத்தும் அவமானத்தையும்
அசுத்தத்தையும் தான் கொடுக்கத் தயாரா யிருக்கின்றன.

அக் குடிசையில் வசிப்போர் யாவர்? சுகபோகத்துடன் உண்டு தின்று
கொழுத்து உடல் பருத்து நடக்கவும் முடியாது சின்னஞ் சிறுநரைப்போல்
தத்தித் தத்தி நடக்கும் நடைப்பிணங்களுக் கொப்பான சீவன்களா? கருணை
யென்பது மருந்தக்கும் கிடையாத நெஞ்சினையுடைய வஞ்சினக்காரர்
களா? இல்லை. அம் மாந்தரின் உள்ளெலும்புக்கூடுகள் அப்படியே தெரி
கின்றன. அவர்கள்தான். அவர்களன்றி வேறு யார் இருக்க முடியும் அக்
குடிசைகளில். அவர்கள் வயிறு உடலோடு ஒட்டிக் கொண்டிருப்பதைப்
பார்த்துப் பதறாத இருதயம் ஒன்று இருக்க முடியுமோ? உலகப் பசி
யனைத்தும் பறந்தோடி வந்து அவர்களிடம் அண்டிக்கொண்டு விட்டது
போலிருக்கிறது. அவர்களது தலை, எண்ணெயைப் பார்த்து எத்தனை
ஊழிகாலம் ஆயிருக்குமோ தெரியவில்லை. கருமையான கேசம் சொர்கிற
மாய் விட்டது. அவர்களின் மேல் துர்நாற்றம் அளவற்று வீசுகின்றதே!
இயற்கையான தன்மையா லுண்டாக்கப்பெற்ற தண்ணீருக்குக் கூடப் பஞ்
சம்போலிருக்கிறது. கிழிந்த கந்தல்—அழுக்குப் படிந்தது. ஏன்? உல
கம் அவர்களை வெறுத்து விரட்டி ஓட்டிவிட்டது—அவர்களிடையில்
மானத்தைக் காப்பாற்ற ஒட்டிக்கொண்டு கிடக்கின்றது. பாவம்! அவ்
வெளியோருக்காதரவு கொடுப்பா ரில்லையா? எண்ணுவார் கூட இல்லையா?

ஓ! ஓ! இதென்ன உலகம்! கடவுளுக்குக் கண்ணில்லையா? ஈவிரக்க
மற்ற ஈயாலோபிகளுக்குச் செல்வத்தை மேன்மேலும் கொடுக்க மட்டும்
அவருக்குத் தெற்றெனத் தெளிந்துவிடும்போ லிருக்கிறது. ஒருவர் தின்று
கொழுப்பதும் மற்றொருவர் பட்டினியால் வாடுவதும்தான் உலகத்தியற்
கையோ? அந்தோ! வறுமையாலும் நோயாலும் வருந்த முறுகின்றவரை

ஏறெடுத்துப் பார்ப்பா ரில்லையா? உலகில் அவர்களுக்கு இடமே இல்லையா? எல்லோரும் கருணையற்று, கல் மனதை உடையவர்களாகி விட்டனரோ?

ஆங்கொரு பாழடைந்த குடிசையில் வயதினால் மூப்படைந்த வயோதிக னொருவன் கண்ணினால் கண்டு சகியாத தோற்றத்தை அளிக்கிறான். அவன் ஒரு வேலையும் செய்யவில்லை யாயினும் அவனுடம்பு வியர்க்கின்றது. அவன் தலையிலிருந்து வரும் அசுத்த வியர்வை கண்ணீருடன் கலந்து, வரும் வழியில் ஒரு ஆறுபோல் உடம்பின்மேல் படிந்த அழுக்கை அடித்துக் கொண்டுவந்து அவனுடம்பை மென்மேலும் மாசுபடுத்துவது சகிக்க முடியாத காட்சியா யுள்ளது. அவன் நினைக்கின்றான். "செல்வம்! அதன் பெருமைதானென்ன இவ்வுலகில். அதனை ஆளுவோர் பணக்காரர்களாம். அவர்கள் ஆட்சிதானென்ன? அவர்களுக்குத்தான் எங்கு சென்றாலும் மரியாதை. கல்வி யில்லாவிடினும் கற்றவர்களே. நட்பற்றவராயினும் உற்றவர்கள். இழுக்கும் இகழ்வும் இருப்பினும் இல்லாதவர்கள். ஒழுக்கம், உயர்குடி, பிறப்பு இல்லாவிட்டாலும் உடையவர்கள். எவ்வளவுதான் கற்றவராயினும் நிதி யில்லாதவனுக்கு மதிப்பேது? அவன் அனுபவித்தற்கு இன்பமில்லை. பணக்காரர்களுக்கு நற்குணமுண்டா? அவர்கள் மனம் என்ன கல்லா? வாயெல்லாம் பற்கள் காட்டிக் கெஞ்சி வாய்விட்டுக் கதறி யழுதாலும் உதவி கிடைப்பதில்லை; உதையே கிடைக்கின்றது. பண மில்லாவிடில் பிணமாக வன்றோ மாறவேண்டும். ஏன்? இச் செல்வப் புழுக்களின் திமிர்தான். என்னே! பணத்தையுடைய பஞ்சைகளின் ஆட்சி! அவர்களால்தான் உலகம் நடக்கிறதாம். என்ன உலகம்! எங்களுக்குக் கதி விமோசனம் கிடையாதா? அன்று முதல் இதுவரை உலகம் நமக்குக் கொடுத்ததென்ன? பசியும் இகழ்வும்தான்."

"கதிரவன் வெளிவர மகிழுந் தாமரை, அவன் ஆகாயங் கடந்து மேற்கடலில் விழும்போது வாடி வதங்குவதுபோல, இப் பணக்காரர்களும் ஒரு காலத்தில் நம்மைப்போல் வாட, நாம் இவர்களை ஆட்டி வைத்தே தீருவோம்" என்று நம்புகிறது அவன் வருத்தம் நிறைந்த பேதை உள்ளம்.

ஆம். அவ்வயோதிகன் வார்த்தைகள் ஒவ்வொன்றும் உண்மைதான். அந்தோ! என்னே அவர்கள் படும்பாடு! அதிலிருந்து அவர்கள் ஈடேற முடியுமா? பிறர்க்குதவாத செல்வம் எவ்வளவு இருந்தும் என்ன செய்யும். அதைக் காப்பது பணத்தைக் காக்கும் பூதத்தின் செயலன்றோ! ஆகையால் இக் கன்னெஞ்சக் கயவரான செல்வர்கள் பூதங்களா? இல்லை. அவர்கள் பூதத்தினுங் கீழ்ப்பட்டவர்கள். செல்வர்களிலும் நல்லவர் உண்டு. ஆனால் அவர்கள் ஏழைகளின் துன்பங்களை உணர்ந்து அனுதாபப் பட்டுவிட்டு சும்மா இருக்கின்றனரே! நடைமுறையில் ஒன்றையுங் காணோமே!

உலகத்தில் மனிதனென்று பிறந்த ஒவ்வொருவனும் ஏழைகளின் துன்பங்களைக் கண்டு வருந்தி உதவி செய்யாமலிருக்க முடியுமா? மன மிளகாத பணக்காரன் பிணமன்றி வேறுவானோ?

என் மனம் ஏனிவ்வாறு பதறுகின்றது. நானொருவன்—ஒன்றுக்கு முதவாதவன்—வருந்துவதா லாவதென்ன? ஒவ்வொருவருடைய மனமும் கருணைக்கடலா யிருக்கக்கூடாதா! அவ்வாறிருந்தால் உலகம் எப்படி இருக்கும்? செல்வர்கள் இதைக் கண்திறந்து பார்ப்பாரா?

—'Oliver Goldsmith'ன் 'City Night piece' ஐத் தழுவியது.

# வயிற்றுப்பாடு

(கார்த்திகேயன்.)

அன்புமிக்க கோமளா!

மக்கள் தம் உடலோம்பலுக்காக உலகிற் படும்பாடு சொல்லுந்தரமன்று. செல்வமிக்க தனவந்தர்கள் ஏராளமான நலன்கள் பல பெற்றிருந்தும், தம் செல்வப்பொருளைப் பெருக்குவதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு அதற்கான வழி துறைகளைத் தேடிச் சென்று அல்லற் படுகின்றனர். எளிய மக்களோ கேவலம் தம் உடம்பைப் பாதுகாக்கப் போதுமான அளவேனும் பொருள் கிடைக்காதா என்று பல்வேறு முறைகளில் முயற்சித்து ஏங்குகின்றனர். இவ்விரு திறத்தவர்களில் ஈண்டு எளியார் சிலர் உழன்றுவரும் தொழில் வகைகளைப்பற்றி வரைய விரும்புகிறேன்.

ஒரு சமயம் நான் திருசிரா மலைக்குப் போயிருந்தபோது படிக்கட்டுகளில் என்பின்னே யாரோ மெல்ல முனகியபடி வந்து கொண்டிருந்தது தெரிந்தது. திரும்பிப் பார்க்கவே ஒரு வயோதிக மாது. வயது 60-க்கு மேலிருக்கலாம். இடையில் ஒரு நீர்க்குடத்தைச் சுமந்துகொண்டு படிகளில் ஏறமாட்டாது ஏறிவந்ததைக் கண்டேன். அந்தச் சிரமத்தைப் பாராட்டா திருப்பதற்காக அந்த அம்மையார், “என்னப்பனே! தாயுமானவா!” என்று இறைவனை அழைத்து வந்தனர் போலும்! அவர் என்னை அணுகியதே, “அம்மா! இப்படி நீங்கள் இத்தத் தள்ளாத வயதில் நீர் சுமந்து செல்வானேன்?” என்று வினவினேன். அதற்கவர், “அம்மா! வயிற்றுப்பாடு இருக்கேடி! சும்மா யார் ஒரு அணா கொடுப்பா?” என்று ஆற்றாமையோடு பதில் தந்தார். இப்படியாக ஒரு தினத்தில் 4, 5 குடங்கள் தண்ணீர் கொண்டு சென்று தாயுமானவ சுவாமிக்கு அபிஷேகம் செய்ய உதவினால் நான்கைந்தணா கிடைக்குமாம். இஃதேபோல் இன்னும் பல விடங்களிலும் இறைவன் திருமஞ்சனத்துக்கென நீர் கொண்டு போய்க் கொட்டிக் கூலிபெற்று வாழும் வாழ்க்கையை ஏழைமக்கள் பலர் மேற்கொண்டுள்ளனர் எனப் பின்னர் அறிந்தேன்.

திருநகரில் நான் வசித்து வந்தபோது பக்கத்து வீட்டில் ஒரு வறியவர் இருந்தார். ஏதோ சுமாராக எழுதப் படிக்கத் தெரிந்தவர். ஆனால் நிரந்தரமான தொழில் எதுவும் செய்ய அவரிடம் மூலதனம் சிறிதும் இல்லை. ஆயினும், அவர் எவ்வாறோ தம் காலத்தைக் கடத்திக்கொண்டு வந்தார். அவர் வீட்டிலுள்ள பெண்டிரும் மானமாக வாழ்ந்து வந்தனர். இது எனக்கு வியப்பாகவே யிருந்தது. பின்னர் விசாரித்தபோது அவர் வாழ்க்கைத் தொழில் புலனாயிற்று. தினமும் அவர் ரிஜிஸ்தரார் ஆபீசுக்குச் செல்வராம். அங்கே பத்திரங்கள் பல பதிவு செய்யப்பட வருமன்றோ! அந்தப் பத்திரங்களுக் கெல்லாம் அவர் ஒரு சாட்சியாக ஆஜராகிக் கையெழுத்திடுவாராம். இங்ஙனம் செய்வதால் ஒரு பத்திரத்திற்கு 2 அணாவுக்குக் குறையாமல் கிடைக்குமாம். இவ்வாறு நாள் ஒன்றுக்கு சராசரி 8 அணாவிற்குக் குறையாமல் சம்பாதித்து விடுவாராம். இப்படிக் காலந் தள்ளுவோர் ஒரு சிலருண்டு.

கோமளா! இன்னும் சிலர் கொண்டுள்ள தொழில் வகைகளைப் பார்! கருமாதி போன்ற உத்திரக்கிரியைகள் நம்மனோர் செய்கின்றன ரல்லவா?

அந்தக் காலங்களில் ஒருபடி அரிசிக்கும், ஒரு வாழைக்காய்க்கும், ஒரு காலணு தட்சணைக்கும் அடித்து விழும் மக்கள் எத்தனைபேர்? ஒழுங்கான வகையில் தம் முயற்சியைச் செலவிட்டுப் பொருள் தேடி வாழ இவர்களுக்குத் தெரியாது போலும்! இக் கூட்டத்தார் அடிக்கடி இந்தத் தானங்கள் நடக்கு மிடங்களை விசாரித்த வண்ணமாகவே யிருப்பர். தானம் வழங்கு மிடம் எவ்வளவு தொலைவானாலும் நடந்து செல்ல ஒரு சிறிதும் அஞ்ச மாட்டார். இவர்கள் வாழ்க்கை முறையை நினைக்குங்கால் என் மனம் பெரிதும் வருந்துகின்றது!

இன்னுஞ் சிலர், "கண்காது அழுக்கெடுக்கலியா?" என்று கூவிக் கொண்டு வீதிகள் தோறும் செல்வதை நீ கண்டிருக்கலாம். இவர்கள் அழுக்கெடுத்து அதனால் வரும் துட்டுகளைக் கொண்டே தங்கள் ஜீவியத்தை நடத்தி வருகின்றனர். இவர்களைப் போலவே பல்லில் பூச்சி எடுத்தல், பச்சை குத்தல் முதலான தொழில்களை மேற்கொண்டு தங்கள் காலத்தைக் கடத்தும் சிலர் உண்டு.

இவ்வாறே 'வாயு பிடிப்பு,' மார்வலி நெஞ்சுவலி, கீல்வாயு, கபால வாயு முதலான எல்லா நோய்களுக்கும் மருந்தெண்ணெய் வாங்கலியா?" என்று வீதிகளில் பலர் மண் கலயங்களில் ஏதோ ஒருவகைத் தைலத்தை எடுத்துக் கொண்டலைவர். தைலம் விற்று அதனால் தமக்கு சில்லரை கிடைக்கவேண்டும் என்பதைத் தவிர இவர்களுக்கு வேறெவ்வித நோக்கமுமில்லை. நோய் குணமாகுமா, ஆகாதா என்பதைப்பற்றி அவர்கள் சிறிதும் சிந்திக்கப் போவதில்லை. இவர்களிடத்தில் நம்பிக்கை வைத்து அந்தத் தைலத்தை உபயோகித்து அதனால் 'தலைவலி போக திருகுவலி வந்தது' என்று இன்னும் பல துன்பங்களுக்கு ஆளானோர் எத்தனையோ பேர் உண்டு.

இன்னும் எத்தனையோ மக்கள் ஜாதகம் கணிப்பவர்கள் என்றும், ரேகை சாஸ்திர நிபுணர்கள் என்றும், பக்ஷி சாஸ்திரம் பார்ப்பவர்கள் என்றும் நாட்டின் பல விடங்களிலும் சுற்றித் திரிவர். இவர்கள் சமயத்துக் கேற்பப் பேசி பெண்மக்களிட மிருந்து பொருள் பறித்துச் செல்வதில் வெகு சமர்த்தர். இத்தகையோ ரிடத்து பெண்மக்களாகிய நாம் எச்சரிக்கையோ டிருக்கவேண்டும்.

மற்றும் ஒரு சிலர் பெரிய யோகிகள் என்று சொல்லிக்கொண்டு தங்கள் உடம்பில் திருநீறு அணிந்து கொண்டும், உருத்திராட்சத்தைக் காதுகளில் உருட்டிக்கொண்டும், கண்களை மூடியவண்ணம், வாய் முணுத்துக் கொண்டு மிருப்பர். இவர்களனைவரும் பார்த்தனைப் போன்ற திருட்டு சாதுக்கள் என்றறிவாய். இவர்களிடத்தில் ஆடவர்களும் விழிப்புடன் நடந்து கொள்ளவேண்டும் என்பது என் கருத்து. இவர்களை நம்மனோர் காண்பதும் ஆகாது.

திருவிழாக்கள் நடைபெறும் இடங்களிலும், ஜனக்கூட்டம் அதிகமாயுள்ள விடங்களிலும் நாம் அனைவரும் விழிப்புட னிருக்கவேண்டும். எத்தனையோ தூர்த்தர்கள் ஆண்மக்களது சட்டைப் பைகளிலுள்ள மணிபர்சுகளையும், பெண் மக்களது ஆபரணங்களையும் நலியாது கவர்ந்து சென்று விடுகின்றனர். இப்படிப் பறி கொடுத்துவிட்டு கண்கலங்கி நின்றோர் பல

# எது தமிழ்த் தொண்டு?

(S. நாராயணன்.)

"ஒரு மொழியைப் பிழையற அழகுபடப் பேசுவதற்கும், எழுதுவதற்கும், இலக்கணம் இன்றியமையாததொரு கருவியாம். அத்தகைய பெருமை வாய்ந்த இலக்கணத்தை உணர்தாலன்றி அம்மொழியைப் பிழையறப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் எங்ஙனமியலும்? அவ்விதம் ஒருவர் இலக்கணத்தை ஐயந் திரிபறக் கற்றுணர்ந்தா லல்லாமல் எழுதவும் பேசவும் புகின், அஃது,

"பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்"

என்பது போன்றாகிவிடும். தானே நன்குணராத ஒருபொருளை ஏனையோருக்கு உணர்த்த முனைதல் ஆலமரத்தினை அறியாத அறிவிலி ஒருவன் அது புளியமரத்தினைப் போன்று வேலியிற் படர்ந்திருக்குமென்று, கூறிய கூற்றினைப் போன்று எள்ளி நகையாடற் குரித்தாகும். இவற்றை யெல்லாம் எதற்காகக் கூறப்புகுந்தோ மெனின் சிலர் (கற்றறிந்த பெரியவர்களாயிருந்தும் கூட) நந்தம் அமிழ்தினு மினிய தீந்தமிழை சீர்திருத்தத் தலைப்பட் டிருக்கின்றனர். அன்னவர்கட்குத் தமிழின் வளர்ச்சியைப் பற்றி ஒரு சிறிதுங் கவலை கிடையாது. ஆனால் தமிழுக்கே இல்லாத புது முறைகளைக் கொண்டுவந்து புகுத்துவதில் அவர்கள் பெரிதும் பங்கெடுத்துக் கொள்கின்றனர். அவர்கள் சீர்திருத்த மெனும் போர்வையில் மறைந்து கொண்டு தமிழ் மொழியைக் கொலை செய்து வருவது நந்தமிழ் மொழியின் தவக்குறையே யாகும். அத்தகைய மாபெருங் கைங்கரியம் செய்துவரும் பெரியாருள் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் ஒருவர்.

இவர்கள் செய்யுட்களைத் திருத்தி அமைத்து வருவது மிகவும் வருந்தத் தக்கதேயாகும். இலக்கண விதிகட்குப் புறம்பான விதிகளை யெல்லாம் தங்கு தடையின்றிக் கையாண்டு வருவது விந்தையிலும் விந்தையே. அன்னவர் அவ் விதிகளை யெல்லாம் எங்கு எதிரிலிருந்து கற்றனரோ யாம் அறியோம். ஒருகால் கடல் கோளான் மூழ்கிய அகத்தியத்தி லிருந்து கற்றறிந்திருக்கலாம். (யார் கண்டார்கள் ?) பேரறிவினராகிய அன்னவர் இத்தகைய குற்றங்கள் இழைப்பது தமிழறிஞர் யாவராலும் மன்னிக்க முடியாததொரு குற்றமாகும். அம் மாதிரிப் பிழைகள் அநேக இடங்களில் ஏற்பட் டிருக்கின்றன. அவற்றில் ஒன்றிரண்டைச் சான்றாக ஈண்டு தருகிறோம்.

---

ளைப் பார்த்திருக்கிறேன். இப்படியும் களவாடித் தம் வயிற்றுப்பாட்டை நடத்தி வரும் மக்கள் சிலர் இருக்கத்தான் செய்கின்றனர். அந்தோ! இவர்கள் இத் தீய பழக்கத்தினின்றும் விடுபடும் நாள் என்றோ!

அடுத்த முறை வெளிநாடுகளில் மக்கள் சிலர் கையாளும் தொழில் முறைகளை வரைகிறேன்.

உனது அன்பு மிக்க தோழி
கமலம்.

"ஜனவரி" மாசம் 1-ந் தேதி வெளிவந்த 'கல்கி'யில் கம்பர் தரும் காட்சியில்,

"நாற்கடல் அன்னவர் ஆசி நவின்றார்
மாற்கடல் அன்ன மனத்தவ னோடும்
கார்க்கடல் போல்(க்)கரு ணைக்கடல் பண்டைப்
பாற்கடல் அன்னதொர் பள்ளி அணைந்தான்"

மேல் எடுத்துக் காட்டிய செய்யுளில் போல்+கரு=போற்கரு எனப் புணராமல் போல்க்கரு வென எங்ஙனம் எந்த விதியாற் புணரப்பட்டதோ? இதை விதியாகக் கையாண்ட திரு. முதலியார் அவர்கள் மேலே செய்யுளின் துவக்கத்தில் நால்+கடல்=நால்க்கடல் என்று புணர்த்தாது, நாற்கடல் என்று புணர்த்தியது யாது கருதியோ? யாம் அறியோம்.

"வேட்டவர் வேட்டபின் வேந்தனும் மேல்நாள்(க்)
கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அல்லால்
ஈட்டிய ஒண்பொருள் உள்ளன எல்லாம்
வேட்டனர் வேட்டவை வேண்டள(வு) ஈந்தான்"

இச் செய்யுளில் நாள்+கூட்டிய=நாட் கூட்டிய வெனப்புணராமல் நாள்க் கூட்டிய வெனப் புணர்ந்திருப்பதும் இலக்கண விதிக்குப் புறம்பானதென்று யாவரும் நன்கு அறியத்தக்கதே! ஒரு சமயம் மெய்யீற்றுப் புணர்ச்சி விதி தெரியாவிடின் போல்+கரு=போல்கரு வென்றும் நாள்+கூட்டிய= நாள் கூட்டிய வென்று பிரித்துப் போட்டிருக்க வேண்டும். அப்படிக் கல்லாது ஈரொற்றாய் வராத லகார ளகாரம் ஈரொற்றாய் வந்தது எவ்விதியால்? இவ்விதம் பற்பல இடங்களில் இத்தகைய குற்றம் திரும்பத் திரும்ப இழைக்கப்பட்டு வருவதைப் பார்த்தால், நம் தமிழ் மொழிக்கே சிதைவு ஏற்பட்டு விடும் போற் றோன்றுகின்றது. இத்தகைய பிழைகள் தமிழை உயிருக் குயிராகப் போற்றி வளர்க்கப் பெரிதும் பாடுபடும் திரு. டி. கே. சி. முதலியார் அவர்களாலேயே இழைக்கப்பட்டு வருகின்றன வென்றால் யாரை நொந்து தான் யாது பயன்? அன்னவரை அவரது அபிமானிகள் பலரும் பின் பற்றினால் தமிழ் மொழியின் கதி என்னவாகும் என்று கருதுதற்கே இயலவில்லை. இதுவா தமிழுக்குச் செய்துவரும் தொண்டு?

மேலும் சிறிதளவு படித்தவர்கள் மனத்திலும் இம் மாதிரிப் பிழைகள் பெரும் புயலை உண்டாக்கி விடுகின்றன. கடைசியில் அவர்கள் எது சரியான புணர்ச்சி எனத் தெரியாது திண்டாடித் திகைக்கின்றார்கள். இவ்விதம் லகார ளகாரம் ஈரொற்றாய் வருவதற்கு திரு. முதலியார் அவர்கள் விதி காட்டி விட்டால் யாம் உள்ளளவும் அவர்களுக்கு நன்றி செய்யக் கடமைப் பட்டுள்ளோம். நிற்க, பற்பல இடங்களில் தமிழ் மொழியை வளர்ப்பதற்குப் பல சங்கங்கள் நிறுவி பேரறிஞர்களைச் சங்கத் தலைவர்களாக நியமித்து தமிழை வளர்த்து வரல் வேண்டும். தமிழ் வளர்ச்சிக்கு இடையூறாகச் சில விதிகளைக் கையாண்டு வருபவர்களைக் கண்டனம் செய்து வளர்த்து வருவதே தமிழ்த் தொண்டாகும். எனவே, அறிஞர்கள் ஒவ்வொருவரும் தமிழை உயர் நிலை யடையும்படி முயற்சி செய்வார்களென நினைக்கின்றேன்.

# வைத்தியம்

(வீ. சங்கர ஐயர்.)

## கருப்ப ஸ்திரீகளுக்கு உண்டாகும் வயிற்றுவலி, இரத்தம் காணல் முதலியவைகளுக்கு

(*a*) *முதல் ஐந்து மாதங்களில்—தாமரைப்பூ, சந்தனம், விளாமிச்சம் வேர், செய்தல் கிழங்கு இவைகளைப் பாலில் அரைத்துக் கொடுக்கவும்.*

(*b*) *ஆறும் மாதம் முதல்:—ஷை மருந்துகளோடு திப்பிலியும் முந்திரிப்பழமும் சேர்த்துக் கொடுக்கவும்.*

(*c*) *ஒன்பதாம் மாதம்:—அரசின்பட்டை, மருதின்பட்டை இவைகளை பாலில் அரைத்துக் கொடுக்கவும்.*

(*d*) *பத்தாம் மாதம்:—இலுப்பைப் பழத்தைப் பாலில் அரைத்து சர்க்கரை சேர்த்து கொடுக்கவும்.*

## கருவளரும் தைலம்

*பசுவின்பால் $\frac{1}{8}$ படி, ஈருள்ளி(வெங்காயம்) 1 வீசை விளக்கெண்ணெய் $\frac{1}{4}$ படி, கழுதைப்பால் $\frac{1}{8}$ படி, கருஞ்சீரகம் $\frac{1}{4}$ பலம், அரைத்து காய்ச்சி மெழுகு பதத்தில் வடிகட்டி ஐந்தாம் மாதம் முதல் ஒரு மாதத்துக்கு மூன்று நாட்கள் வீதம் காலை மாலை ஒரு டீ ஸ்பூன் கொடுக்கவும். புளி தள்ளவும்.*

## கர்ப்பஸ்ராவம் (கர்ப்பம் கரைவது) உண்டாகாம லிருக்க

*பற்படகப்புல், கரிப்பான் சமம் அரைத்து எலுமிச்சங்காய் அளவு ஒரு படி பசுவின் நெய்விட்டு காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கி வடிகட்டி ஒரு டீ ஸ்பூன் வீதம் மூன்றாவது மாதம் முதல் கொடுக்கவும். பத்தியமில்லை.*

## நஞ்சுவிழ கஷ்டப்பட்டால்

*கருவேப்பிலை, வேப்பிலை, முருங்கையிலை, வகைக்கு ஒரு பிடி, ஒரு கடுக்காய் பொடியும் போட்டு ஒரு படி தண்ணீர் விட்டு $\frac{1}{8}$ படி யாக்கிய கஷாயம் கொடுக்கவும்.*

## குழந்தைக்கு சிறுநீர் கட்டினால்

*எலிப்புழுக்கை, வெள்ளரி விதை, அரைத்து வயிற்றில் பூசவும்; வெங்காரத்தைப் பொரித்து முலைப்பாலில் கொடுக்கவும்.*

## குழந்தைகள் வயிறு பொருமலுக்கு

*திப்பிலி, கடுகுரோகிணி, பொடித்து தேன் கலந்து முலைக் கண்ணில் போடவும். பின் பால் கொடுக்கவும். அதிமதுரத்தை காடியில் அரைத்து வயிற்றில் பூசி அதன் மீது வெற்றிலையால் விளக்கெண்ணெய் தடவி வாட்டி வயிற்றி விடவும்.*

## தாய்க்குப் பால் சுரக்க

*செழ்வாய்ச்செல்லி வேரை பாலிலரைத்துக் கொடுக்கவும்.*

### பக்ஷி தோஷங்களுக்கு

(*a*) வில்வ இலை, சீரகம், கஷாயம் கொடுக்கவும்.

(*b*) கோரோசனை, திப்பிலி, அதிமதுரம் முலைப்பாலில் கொடுக்கவும்.

### கணைக்கு

(*a*) விளக்கெண்ணெய், பசுவின் பால், வகைக்கு $\frac{1}{2}$ படி, கீழ்வாய் நெல்லிச்சாறு 1/16 படி, துளசி, சுக்கு, விஷ்ணுகிராந்தி, தூதுவிளை, கடுக்காய், அதிமதுரம், வகைக்கு $\frac{1}{4}$ பலம், அரைத்து 1 படி இளநீர் சேர்த்து காய்ச்சி வடிகட்டி இரவு படுக்கும் முன் தினம் $\frac{1}{2}$ டீ ஸ்பூன் வீதம் கொடுக்கவும்.

(*b*) எலுமிச்சம்காயளவு பசுவின் வெண்ணெய், கொட்டைப்பாக்களவு மணத்தக்காளி இலை அரைத்து, காய்ச்சி வடிகட்டி முன்போல கொடுக்கவும்.

(c) கற்றாழைச் சோறு ஒரு தேங்காய் அளவு, வெந்தயம் $\frac{1}{2}$ பலம், வெங்காயம் 1 பலம், விளக்கெண்ணெய் 1 படி காய்ச்சி முன்போல் கொடுக்கவும்.

(*d*) விளக்கெண்ணெய் 1 படி, வல்லாரைச் சாறு $\frac{1}{2}$ படி, வெந்தயம் 2 பலத்தை பசுவின் பால் விட்டரைத்து, சேர்த்து காய்ச்சி முன்போல் கொடுக்கவும்.

### சொறி, சிரங்கு, கரப்பானுக்கு

பூவரசம் பட்டையை பழைய சோற்று நீர்விட்டு அரைத்து இடித்த சாறு தினம் $\frac{1}{8}$ படி வீதம் 3 நாள் காலை கொடுக்கவும். புளி உப்பு கூடாது.

### விக்கலுக்கு

மாதுளை, நெற்பொரி, சர்க்கரை, திப்பிலி, பொடித்து தேனில் கொடுக்கவும்.

### வாந்திக்கு

கலைக்கொம்பு, திப்பிலி, அதிவிடயம், சமம் பொடித்து தேனில்.

### காமாலைக்கு

மணத்தக்காளி, கீழ்வாய்நெல்லி அரைத்து, தினம் காலை எலுமிச்சம் காயளவு.

### வாந்தி விக்கலுக்கு

மயிலிறகு சாம்பல், கிராம்பு, ஏலம், ஜீரகம் பொடித்து தேனில்.

### மார்புச்சலி, கோழைக்கட்டு

பிரண்டையை வதக்கிச் சாறு பிழிந்து கொடுக்கவும்.

### காதினுள் ஈ சென்றால்

குப்பைமேனிச் சாறு காதில் விடவும்.

# வைத்தியம்

## கக்குவானுக்கு

(*a*) தூதுவிளைச்சாறு, நெய் இவை சமம், கோஷ்டம் தட்டிப் போட்டு காய்ச்சி வடிகட்டி கொடுக்கவும்.

(*b*) மயிலிறகு சாம்பல், மிளகு சாம்பல் சமம் தேனில்.

(c) முள்ளெலி, அல்லது நத்தைச்சதையை நெய்யில் வறுத்து வடிகட்டிய நெய்யைக் கொடுக்கவும்.

## வெள்ளெழுத்துக்கு

தும்பை நந்தியாவட்டை, காரெள், புளி இவைகளின் பூக்கள், திப்பிலி, தேன் சேர்த்து அரைத்து கண்ணில் போடவும்.

## ஷி க்குத் தைலம்

பொன்னாங்காணி, கரிப்பான், நெல்லிக்காய், சாறு வகைக்கு 1 படி, முசுமுசுக்கை, நெரிஞ்சில், தென்னம்பூ, வில்வம், துளசி, கண்டங்கத்திரி இவைகளின் சாறு $\frac{1}{8}$ படி, இளநீர் $\frac{1}{2}$ படி, தாமரைப்பூ, மிளகு, நன்னாறி, அதிமதுரம் சந்தனம், வகைக்கு $\frac{1}{4}$ பலம், சீரகம் மல்லி, $\frac{1}{2}$ பலம், வெட்டிவேர், விளாமிச்சவேர் $\frac{1}{2}$ பலம், பசுவின்பால் 1 படி, காய்ச்சி மெழுகு பதத்தில் வடிகட்டி குளித்து வரவும்.

## [நீரேற்ற மண்டையிடிக்கு

அரத்தை, சதகுப்பை, திருகடுகு வகைக்கு ஒரு வராகனெடை, கால் படி நொச்சியிலைச் சாற்றில் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி கொடுக்கவும்; அரத்தைப் பொடியை நஸ்யம் செய்யவும். சாம்பிராணி, கடுகு, புழுங்கரிசி, இவைகளை அரைத்து கொதிக்க வைத்து நெற்றியில் போடவும். தும்பையிலை, வேப்பீர்க்கு. நொச்சியிலை எருக்கம்பழுப்பு, இவைகளை இடித்து தண்ணீரில் போட்டு வேக வைத்து வேது பிடிக்கவும்.

## ஒத்தைத் தலைவலிக்குத் தைலம்

(*a*) கரிப்பான் சார், இளநீர், நல்லெண்ணெய், பசுவின் பால் வகைக்கு $\frac{1}{2}$ படி, மிளகு பலம் 1, சந்தனம் பலம் $\frac{1}{4}$, அதிமதுரம் பலம் $\frac{1}{4}$, அரைத்து கலக்கி மெழுகு பதத்தில் வடிகட்டி குளித்து வரவும்.

(*b*) நல்லெண்ணெய், குப்பைமேனிச் சாறு, மலைவேப்பிலைச் சாறு சமம் காய்ச்சி குளித்து வரவும்.

(c) $\frac{1}{2}$-படி நல்லெண்ணெயில் அதிமதுரம், சுக்கு, வசம்பு வகைக்கு 2 பலம், $\frac{1}{2}$ படி பசுவின் பால்விட்டு அரைத்து காய்ச்சிக் குளிக்கவும்.

(*d*) நல்லெண்ணெய், பசு நெய், வெற்றிலைச் சாறு, எலுமிச்சம்பழச் சாறு சமம், கருஞ்சீரகம் கலிக்கம். எண்ணெய் காய்ச்சி குளிக்கவும்.

## ஷி க்குப் புகை

கருஞ்சீரகம், கோழிமுட்டைத் தோடு, கழற்சிப்பருப்பு, சமம், நொச்சியிலைச் சாற்றில் அரைத்து துணியில் தடவி திரியாக்கி புகை மூக்கில்

பிடிக்கவும். மிளகை மூலைப்பாலில் அரைத்து கொதிக்க வைத்து நெற்றியி லும் தலையிலும் பூசவும்.

## காய்ச்சலுக்கு

(a) சுக்கு, மல்லி, தேசாவரம் வகைக்கு $\frac{1}{4}$ பலம் இடித்து 1 படி தண்ணீரில் கஷாயம் வைத்து $\frac{1}{4}$ படியாக்கி 2 வேளையாக மூன்று நாள் கொடுக்கவும்.

(b) சுக்கு, கடுக்காய், நிலவேம்பு, வேப்பம்பட்டை சிந்தில், பேய்ப் புல் வகைக்கு $\frac{1}{4}$ பலம் சேர்த்து கஷாயம் முன்போல் செய்து கொடுக்கவும்.

## குளிர் காய்ச்சலுக்கு

(a) பெரும்தும்பை யிலையை இடித்து ஆவியில் வெந்து பிறகு 1/16 படி சாறு எடுத்து சமன் தேன் சேர்த்து 3 வேளை கொடுக்கவும்.

(b) சிரகம், குறுக்தோட்டி வேர் சமம் கஷாயம் 6 வேளை.

(c) மிளகாயிலை 9, மிளகு 7, வெள்ளைப்பூடு 1 அரைத்து 6 பொழுது.

## ஜன்னிக்கு

தைவேளைச்சாறு. இஞ்சிச்சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி தனித் தனியே முறித்து சேர்த்து, திரிகடுகு பொடிபோட்டு தேன்விட்டுக் கொடுக்கவும்.

## உட்காய்ச்சலுக்கு

பசுவின் பால், முசுமுசுக்கைச் சாறு, நெல்லிச் சாறு, கற்றாழைச் சாறு வகைக்கு $\frac{1}{8}$ படி, நல்லெண்ணெய் 1 படி கலந்து 1 பலம் அதிமதூரம் அரைத்து கலக்கி காய்ச்சி குளிக்கவும்.

## சகல காய்ச்சல்களுக்கும் லிங்க மாத்திரை

லிங்கம் பலம் 1, திப்பிலி பலம் $\frac{1}{2}$, பசுவின் பாலில் அரைத்து பயற் றளவு மாத்திரை சுக்குக் கஷாயத்தில் கொடுக்கவும்,

## மூல ரோகத்துக்கு

(a) பிரண்டை வேர், கற்றாழை வேர், கடுக்காய், சுக்கு, மிளகு, வெள்ளைப்பூடு, சமம் புளித்த மோரில் அரைத்துக் கொடுக்கவும்.

(b) காரெள், கடுகு, திப்பிலி, சுக்கு, வகைக்கு பலம் 1, வதக்கி சூரணித்து வெந்நீரில் திரிகடிப்பிரமாணம் காலை மாலை கொடுக்கவும்.

(c) நாயுருவி யிலை, கொட்டைப்பாக்கு அளவு அரைத்து நல்லெண் ணெயில் கலந்து சாப்பிடவும்.

(e) பிரண்டைக் கொழுந்து அரைத்து நல்லெண்ணெயில் கொடுக்க வும்.

(f) வேப்பின் பருப்பை அரைத்து சற்று வதக்கி வைத்து கட்ட மூல முளை விழுந்து விடும்.

(g) பெருங்காயம், படிகாரம், கொட்டாங்கச்சிக் கரி, இவைகளை கொட்டாங்கச்சி தைலத்தில் அரைத்த களிம்பு போடவும்.

(h) பிரண்டைச் சூரணம் சமம் சர்க்கரை சேர்த்து சாப்பிடவும்.

(i) மருதம்பட்டை ¼ பலம் பசுவின் பால் விட்டு அரைத்து கொடுக்கவும்.

### அஜீரண கிரகணிக்கு

(a) வெள்ளறுகும், குப்பைமேனியும், உலர்த்திப் பொடித்து, திரு கடிப் பிரமாணம் செய்யில் கொடுக்கவும்.

(b) அமுக்கருவேர், இந்துப்பு; பொடித்து தேனில் கொடுக்கவும்.

### வயிற்றுக்கடுப்புக்கு

(a) ஒரு எலுமிச்சம் பழத்தை கால்படி எருமைத் தயிரில் விட்டுச் சாப்பிடவும்.

(b) வெந்தயம், பெருங்காயம், வெள்ளைப்பூடு, முருங்கை யீர்க்கு, இவைகளைச் சிறுக வறுத்து ஒரு படி தண்ணீர் விட்டு ⅛ படி யாக்கி இரு வேளை கொடுக்கவும்.

(c) ⅛ படி எருமைப்பாலை கறந்தவுடன் ஒரு துளி புளியிலைச்சாறு விட்டு 6 நாள் காலை சாப்பிடவும்.

(d) சுண்டவற்றல், கருவேப்பிலை. மாம்பருப்பு, ஓமம், மாதுளம் பழத்தோடு, வெந்தயம் சமம் வதக்கிப் பொடித்து திரிகடுப்பிரமாணம் தயிரில் கொடுக்கவும்.

### அண்ட வாயுவுக்கு

கழற்சிப்பருப்பு, வெள்ளைப்பூடு, முருங்கைப்பட்டை, சுக்கு, கருஞ் சாணம், வகைக்கு ⅛ பலம் வீதம் 1 படி தண்ணீரில் கஷாயம் செய்து ⅛ படி யாக்கி தினம் இரு வேளை வீதம் மூன்றுநாள் கொடுக்கவும்.

### அஜீரண வாயுவுக்கு

மிளகை வறுத்துப் பொடித்து திரிகடி யளவு தேனில் கொடுக்கவும்.

### சகல வாய்வுக்கும்

(a) அமுக்கிருவேர், சீரகம், திரிகடு, ஏலம், கிராம்பு, அக்கிரகாரம், அரத்தை, சமம் பொடித்து திரிகடி அளவு தேனில் கொடுக்கவும்.

(b) மிளகு, ஓமம், வெந்தயம், சீரகம், தைவளை வேர் பொடி, இவை களைப் பொடித்து தேனில் கொடுக்கவும்.

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)

ஸரோஜா:—"போதும்! நான் இதற்குமேல் ஏதுவும் சொல்ல முடியாது. இத்துடன் நீ போய்விடலாம்"

வீரமார்த்தாண்டன் அவளருகில் நெருங்கினான். "பெண்ணே! வீரமார்த்தாண்டனிடம் பொய் சொல்லிவிட்டுப் போய்விடலாம் என்று நினைக்காதே"......................

சரோஜா திடீரென்று கீச்சிட்டுக் கத்தினாள். அவள் இப்பொழுது நிஜமாகவே பயந்தாள்.

உடனே பக்கத்தறையி லிருந்து இருவரும் எழுந்து இங்கு ஓடிவரும் சப்தம் கேட்டது. உடனே வீரமார்த்தாண்டன் சமையலறைக் கதவைத் திறந்தான். அப்பொழுது டாக்டரும், சச்சிதானந்தமும், "பெண்ணே! எதைக் கண்டு பயந்து, அப்படிக் கூக்குரலிட்டாய்," என்று வினவிக் கொண்டே வந்ததைக் கண்டான். அவ்விருவர் கைகளிலும் துப்பாக்கிகள் இருந்தன.

இதைக் கண்டதும் வீரமார்த்தாண்டன் இரண்டே எட்டில் அவர்களைக் கடந்து, தான் வந்த வழியே, மாடிப் படியண்டை விரைந்து சென்றான்.

வீரமார்த்தாண்டனின் உருவத்தைக் கண்டதும், சச்சிதானந்தம், "டாக்டரே! விடாதீர்கள்! இவன்தான் வீரமார்த்தாண்டன். இவனைப் பிடித்தால் நமக்கு ஏராளமான சன்மானம் கிடைக்கும். உம்!"

என்று சொல்லியவண்ணம் வீரமார்த்தாண்டனைக் குறி பார்த்துச் சுட்டான். ஆனால் குறி தவறிவிட்டது! மறுமுறை சுடுவதற்குள் வீரமார்த்தாண்டன் படியை யடைந்து, அந்தப் பக்கம் போய், அங்கிருந்த கதவை உடனே மூடி வெளிப் பக்கம் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டான். அதே சமயத்தில் ஐந்தாறு குண்டுகள் பாய்ந்து, அக் கதவில் துளை யுண்டாக்கின.

வீரமார்த்தாண்டன் தன் நேரத்தைச் சிறிதும் வீணாக்கவில்லை. ஏனெனில் மேலே, இன்னும் டாக்டரும், சச்சிதானந்தமும், "வீரமார்த்தாண்டன்; வீரமார்த்தாண்டன். அவனைப் பிடியுங்கள்," என்று கூக்குரலிட்டுக் கொண்டிருந்தார்கள்......................

கீழே இறங்கியவுடனே வீரமார்த்தாண்டன் தன் கருப்பு அங்கியையும் முகமூடியையும் கழற்றித் தன் இடுப்பைச் சுற்றி பெல்ட் போலக் கட்டிக்கொண்டான். இப்பொழுது அவ்விடத்தில் நின்ற கருணாகரன் வெகு வேகமாகப் பாஸ்கர விலாஸை நோக்கி நடந்தான்.

அப்பொழுது அவன் மனம் பல எண்ணங்களை எண்ணிக்கொண்டிருந்தது.

'இப்பொழுது புருஷோத்தமனின் குழந்தை, முகமூடியி னிடத்தில் இருக்கிறது. ராமநாதனின் மனைவியும் முகமூடியினிடம் தான் அத் தோப்பினுள் அகப்பட்டிருக்கவேண்டும்,' என்று நினைத்தான். இன்னும் இதைப்போல் எத்தனை பேர் இருக்கிறார்களோ!

புருஷோத்தமன் தோப்பினருகில் வந்து பேசிய சில விஷயங்களால் வீரமார்த்தாண்டன் நிச்சயமாக ஒரு விஷயத்தைத் தெரிந்துகொண்டான். அதாவது, முகமூடியின் இருப்பிடம் அத் தோப்பைச் சேர்ந்த வீடுதான் என்பதைத் தெரிந்துகொண்டான்.

தவிர, சரோஜாவிடமிருந்து அதிக விஷயங்களைத் தெரிந்துகொள்ள முடியாததற்காகத் தன்னையே நொந்துகொண்டான்.

ஆனால் சரோஜாவின் பேச்சுக்களிலிருந்து முகமூடி மனிதன் இன்ஷியூரன்ஸ் பணத்திற்காகவே இப்படித் தற்கொலைகள் செய்துகொள்ளும்படி தூண்டுகிறான் என்பதைத் தெரிந்துகொண்டான். ஆனால் அவனிடம் ஒரு சக்தியில்லாமல் இக் காரியங்களைச் செய்ய முடியாது! அப்படியானால் அச் சக்தி யாது?

முதன் முதலில் முகமூடி தன் ஆபீஸில் தன்னை எச்சரித்த பொழுது, அதிலிருந்து வீரமார்த்தாண்டன் (அதாவது-அரசகேசரி) முகமூடி உயர் குடும்பத்தில் பிறந்தவனென்றும், தான் நினைத்த காரியத்தைச் செய்து முடிப்பதில் வல்லவனென்றும், அதிகப் பணம் படைத்தவனென்பதையும் தெரிந்திருந்தான்!

ஆனால் முகமூடி யார்!

வீரமார்த்தாண்டனின் மனம் முகமூடியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது. முக மூடியைப் பற்றியே சிந்தனை செய்துகொண்டிருந்தது.

இதுவரையில் நடந்த விஷயங்களிலிருந்து, 'தற்கொலைச் சங்கம்' ஒன்றிருந்திருக்க வேண்டுமென்றும், மற்றவர்கள் தற்கொலை செய்துகொள்ள அவர்கள் பணத்தைத் தான் முகமூடி அடைகிறான் என்றும் தெரிந்துகொண்டான் கருணாகரன். ஏனெனில் இதே விஷயம்தான் ராமநாதன் விஷயத்திலும் நடந்திருக்கிறது. சரோஜாவும் தன் கணவன் தற்கொலைக்காகவே பயப்படுகிறாள்.

ஆனால் புருஷோத்தமனோ! அவன் குழந்தை இப்பொழுது முகமூடியினிடம் இருக்கிறது. ஆம்! ஒரு வேளை புருஷோத்தமனையே தற்கொலை செய்துகொள்ளும்படியாக முகமூடி தூண்டுகிறானோ? ஏனெனில் இறந்துகிடந்த புருஷோத்தமனின் மனைவிக்குப் பக்கத்திலிருந்த கடிதம் அதை ருஜுப்படுத்திற்று.

தவிர புருஷோத்தமன், ஏன் முகமூடிக்குப் பயப்பட வேண்டும்? அவனுக்குத் தான் முகமூடியின் இருப்பிடம் தெரிந்திருக்கிறதே. பின் ஏன், போலீசாரிடம் சென்று முறையிடக் கூடாது.........!

இப்படி யெல்லாம் யோசித்துக் கொண்டே வந்த கருணாகரனின் மனதில் சடேரென்று ஒரு எண்ணம் தோன்றிற்று.

"ஏன் அந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனிக்குச் சென்று, தற்கொலை செய்துகொண்டவர்களின் பணங்கள் யாராருக்குச் சேருகின்றன என்று தெரிந்துகொள்ளக்கூடாது? அதன் மூலமாக்வாவது முகமூடியின் இருப்பிடத்தைத் தெரிந்துகொள்ளலா மல்லவா!"

அப்பொழுது கருணாகரன் மனதில் சடேரென்று இன்னொரு எண்ணம் தோன்றிற்று.

'ஏன்! சச்சிதானந்தத்தைக் கண்டு பேசக்கூடாது. ஏனெனில், சச்சிதானந்தம் மானேஜராய் இருப்பதனால், ஒருவேளை, தற்கொலை செய்து கொள்ளுபவர்களின் பணம் யாரைப்போய்ச் சேருகிறது என்று அவனுக்குத் தெரிந்திருக்கலாமல்லவா' என்று எண்ணினான் கருணாகரன்.

உடனே அவன் மீண்டும் 38-ம் நெம்பர் வீட்டை நோக்கித் திரும்பி நடக்கவாரம்பித்தான். ஏனெனில் எப்படியாவது சச்சிதானந்தத்தைக் கண்டு பேசிவிட வேண்டுமென்று அவன் எண்ணினான...சிறிது தூரம் செல்வதற்குள், சச்சிதானந்தமே, எதிரில் வருவதைக் கண்டான் கருணாகரன்.

'ஆம்! இப்பொழுதுதான் அவர் சரோஜாவின் வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்துகொண்டிருக்க வேண்டும்', என்று நினைத்தான்.

ஆனால்! இந்த (கருணாகரன்) வேஷத்துடன் போய் அவருடன் எப்படிப் பேசுவது? அவருக்கு அரசகேசரியைத் தெரியும்; ஆனால் கருணாகரனைத் தெரியாதே!—

கருணாகரன் தன் மனதைத் திடப்படுத்திக் கொண்டான். பிறகு நேராக சச்சிதானந்தத்தினிடம் சென்று, "ஐயா! தயவுசெய்து என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். நீங்கள் தானே, இன்ஷியூரன்ஸ் கம்பெனி மானேஜர், சச்சிதானந்தம்," என்று கேட்டான்.

சச்சிதானந்தம் ஒரு நிமிஷம் திகைத்து நின்று, பிறகு கருணாகரனை உற்றுக் கவனித்தான்.

ஆனால், மிகவும் நிதானமாகவும் பொருத்தமாகவும் அமைத்துக்கொண்டிருந்த அந்த மாறு வேஷத்தை சச்சிதானந்தத்தால் அறிந்துகொள்ள முடியவில்லை. இதே மனிதனுடன் தான் முந்தைய தினம் நாடகக் கொட்டகையில் பேசியிருந்தும் இப்போது தெரிந்துகொள்ள முடியவில்லை!

அவ்வளவு பொருத்தமாக அமைந்திருந்தது, அரசகேசரியின் மாறு வேடம்.

சச்சி:—"ஐயா! உம்மை எனக்குத் தெரியவில்லை. ஆனால் நான்தான் சச்சிதானந்தம். உமக்கு என்னிடமிருந்து வேண்டுவது என்ன?"

கருணா:—ஐயா! என் பெயர் கருணாகரன். தங்களுடன் நட்புக்கொள்ளும்படி எனக்கு அரசகேசரியிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது......"

சச்சிதானந்தம் அதற்குள் இடைமறித்து, "அரசகேசரிதான் நேற்று இரவு மரணமடைந்து விட்டாரே?"

கருணா:—"ஆம்! அவர் இறப்பதற்கு முன்புதான் அவர் எழுதிய கடிதத்தை எனக்கனுப்பினார். அவரைக் கொன்றவர்களை நான் கண்டுபிடிக்க நீர் எனக்கு உதவிசெய்ய வேண்டும். என்ன!"

சச்சி:—"என்னைத் தாங்கள் தயவுசெய்து மன்னிக்கவேண்டும். நான் செய்யக்கூடிய காரியம் ஒன்றுமேயில்லை. தவிர, அரச கேசரியைக் கொலை செய்தவர்கள் யாரென்பதே எனக்குத் தெரியாது! தவிர, நீர் அரசகேசரியின் நண்பர்தான் என்பதை எப்படித் தெரிந்துகொள்வது?"

கருணாகரன் இன்னும் சற்று நெருங்கினான். "சச்சிதானந்தரே! அதை வேண்டுமானால், நான் ருஜுப்பிக்கிறேன். அரசகேசரி எனக்கெழுதிய கடிதத்தில், 'நேற்றைய தினம், நீர், அவரிடம், உங்கள் கம்பெனி தற்கொலை

களின் மூலம், அதிக கஷ்டத்தை அடைந்து வருகிறதென்று சொன்னதாக எழுதியிருக்கிறார். இவ்வார்த்தையிலிருந்தாவது நான் அரசகேசரியின் நண்பன் என்பதைத் தெரிந்துகொண்டீர்கள் அல்லவா?" என்று கேட்டான்.

உடனே சச்சிதானந்தம் நிமிர்ந்தார். அவர் கருணாகரனைப் பார்த்து, "ஐயா! நீங்கள் சொல்வது வாஸ்தவம் தான். நான் நேற்றைய தினம் இந்த விஷயத்தைப்பற்றி அரசகேசரியிடம் பேசிக்கொண்டிருந்தேன்! சரி! வாருங்கள். நாம், தனியாகச் சென்று சம்பாஷிக்கலாம்," என்றார்.

கருணா:—உம்; உம்; முடியாது. என்னால் ஒரு நிமிஷத்தையும் பேசுவதில் கழிக்க முடியாது. நான் உங்களிடமிருந்து சில கேள்விகளுக்குப் பதில் தெரிந்துகொள்ள வேண்டும். அதற்குதவி செய்தால், போதுமானது."

"சச்சி:—சரி, கேளுங்கள்.

கருணா:—"இதுவரையில் தற்கொலை செய்து கொண்டவர்களின் இன்ஷியூரன்ஸ் பணங்களுக்கெல்லாம் யார் உரிமையாளர்கள்?'

சச்சிதானந்தம் ஒரு நீண்ட நேரம் கருணாகரனை உற்றுப் பார்த்தார். பிறகு மெல்லிய குரலில் புன்னகை செய்துகொண்டே, "இறந்தவர்களின் மனைவிகள்," என்றார்.

கருணாகரனின் கண்கள் விரிந்தன.

கருணா:—இறந்தவர்களின் மனைவிகளெல்லாம் இங்கேயேதான் இருக்கிறார்களா?

சச்சி:—"இல்லை; அவர்கள் தங்கள் துக்கத்தை மறப்பதற்காக வெளியூர்களுக்குச் சென்றிருக்கிறார்கள். ஏனெனில் அவர்களின் கணவன்மார் இறந்ததினால் உண்டான துக்கத்தைத் தாளாமல் போயிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்."

கருணா:—அவர்களுக்குச் சேரவேண்டிய பணங்களை, எப்படி அனுப்புகிறீர்கள்?

சச்சி:—"அவர்கள் கைப்பட லெட்டர்கள், பல இடங்களிலிருந்து வரும். அந்த விலாசங்களுக்கு உடனே பணத்தைச் செக்கின் மூலம் அனுப்பி விடுவோம்."

கருணாகரன், மறுபடியும் தோல்வி யடைந்தான்! ஏனெனில் முகமூடியைப் பற்றி ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லையே!

அவன் மனதில் அப்பொழுது திடீரென்று ஒரு எண்ணம் தோன்றிற்று. அவன் தைரியமாக நிமிர்ந்து, "சச்சிதானந்தரே! இவ்வளவு காரியங்களையும் திரைமறைவிலிருந்து யார் நடத்துகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

சச்சிதானந்தம் சற்றுநேரம் வரையில் கருணாகரனை உற்றுக் கவனித்தார். பிறகு, "யார் பின்னால் இருந்து நடத்துகிறார்களா?—யார் அப்படி நடத்தக் கூடும்—முகமூடி என்றொரு திருடனைத் தவிர!—"

"துப்பறியும் புலியே! எனக்கு முகமூடி என்றொரு திருடனைப் பற்றிச் சந்தேகமாகவிருக்கிறது. முடிந்தால், முகமூடி யாரென்று கண்டு

# ஆதவன் தோற்றம் ★ (வேலழன்.)

கீழ் வானத்தின் கண்ணே, அரசன் வருமுன் அவன்றன் பரிசனம் வருவதுபோல் சூரியன் வருமுன் அவன்றன்னொளி வாராநின்றது. முதலி லவ்வொளி வெள்ளி மஞ்சள் நிறமாய் விளங்கா நின்றது. வர வர மஞ்சள் நிறமாய்த் தோன்றி மனங்கவரா நின்றது. பையப் பைய மேலெழுந்தான் செங்கதிரோன். உலகமிசை உணர் வெழுப்பினான். ஆகா அவன்றன் செயல்தா னென்னே! கண் மறைத்த காரிருள் கடுகிச் சென்றது. பெருங் கடலில் விழியலனும் ஒளிபரப்பினான். விண்ணிலே, மண்ணிலே வீசுகிறான் பொன்னொளியை. மலைகள், சோலைகள், ஆறுகள், இயற்கை எழில்கள் இவைகளைக் கண்டு களிக்கச் செய்தான் வானுலவோன்.

புற்பூண்டுகளிலே தங்கா நின்ற பனி நீர் பறந்தோடியது. காதலன் வரவை நோக்கி வாடி நின்ற காதலி காதலன் வரக் கண்டதும் மகிழ்வது போலச் செங்கதிரோன் வரவைக் கண்ட குளத்தினின்ற தாமரை மலர்கள் தன்னிதழ் விரித்து மலர்ந்தன. அம்மலரைத் தேடி அழகிய வண்டினங்கள் ரீங்காரம் செய்துகொண்டு தேனருந்த வரும் வேடிக்கை வெகு விநோதமாயிருந்தது. புள்ளினங்கள் இனிமை மிகுமிசை பாடிச் சிறகைப் பட படவென்றடித்து விண்ணை நோக்கி வேகமாய்ச் சென்றன. சேவல்கள் வீட்டுக் கூரைகளிலே ஏறிக் கொக்கரித்தன.

ஆற்றங்கரை மருங்கிலே செழித்துப் பருத்து உயர்ந்து வளர்ந்திருக்கும் மரங்கள் பேரிரைச்சல் செய்து தங்கள் களிப்பை விளக்கின. மணல் திட்டுகளிலே ஆதவன் ஒளியினான் வெள்ளியம் பருக்கை ஒளிவிட்டு விளங்கா நின்றன. ஆற்றில் நீராடித் திருநீறணிந்து ஐந்தெழுத் தறையா நின்றனர் அந்தணர்.

குடியானவர்கள் வாயில் ஆலம் விழுதுடன் கலப்பையைத் தோள்மேற் சுமந்து காளைகளைக் கையினிற் பிடித்துக்கொண்டு குதூகலமாய்த் தத்தம் வயல்களை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர். அவர்கள் இல்லக்கிழத்திகள் மாட்டின் மடிபிழுத்து பால் கறந்துகொண்டிருந்தனர். சிலர் ஆற்றுக்கு ஊற்றுத் தண்ணீரெடுத்து வரச் சென்றனர். சிலர் குட்டை, குளங்களில் பாத்திரந் துலக்கிக்கொண்டிருந்தனர். சிலர், மோரோ மோ ரென்றும் சிலர் பனஞ்சாறோ சாறென்றும் கூவிக்கொண்டிருந்தனர்.

ஆலயங்களிலே மணி யோசை வானளாவிற்று. பூசை நடந்தது. அதனைக் காணப் பெண்டிரும், குழந்தைகளும், ஆடவரும் பூசைக்கான பொருள்களெடுத்துக் கும்பல் கும்பலாகச் சென்றனர்.

அரசனை மக்கள் மட்டும் ஆரவாரத்துடன் வரவேற்கின்றனர். ஆதவன் வரவை அவனியிலுள்ள உயிர்கள் அனைத்தும் வரவேற்கின்றன.

ஒளிகண்டே உலகெங்கும் ஒலி கிளம்பியது.

---

பிடிக்க முயலுங்கள். அப்பொழுது பாக்கி, சந்தேகங்களும் உங்களுக்குத் தீர்ந்து போய்விடும்.''

இவ்விதம வெறுப்புடன் சொன்ன சச்சிதானந்தம், அதற்குமேல் கருணாகரனுடன் பேச விரும்பாதவர் போல, கும்பலில் சடக்கென்று புகுந்து, திரும்பிக்கூட பார்க்காமல் மறைந்தார்.

கருணாகரன் பிரமை பிடித்தவன் போல் நின்றுகொண் டிருந்தான்.

## சித்திரபானுஹு வைகாசிமீ நவக்கிரக நிராயன சுத்த ஸ்புடம்.

(சென்னை: காலை 6-மணி இந்தியா ஸ்டாண்டர்டு மணி)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன். | | சந்திரன். | | அங்காரகன். | | புதன் | | குரு. | | சுக்கிரன். | | சனி | | ராகு. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க | பா. | க. | பா | க. | பா. | க. |
| 1 | 15 | 24 | 23 | 29 | 53 | 15 | 32 | 78 | 1 | 48 | 25 | 60 | 41 | 345 | 51 | 37 | 38 | 136 | 19 |
| 2 | 15 | 28 | 19 | 30 | 51 | 28 | 51 | 78 | 37 | 49 | 37 | 60 | 52 | 347 | 0 | 37 | 46 | 136 | 16 |
| 3 | 15 | 32 | 16 | 31 | 49 | 40 | 58 | 79 | 14 | 50 | 50 | 61 | 3 | 348 | 9 | 37 | 53 | 136 | 13 |
| 4 | 15 | 36 | 12 | 32 | 46 | 53 | 4 | 79 | 50 | 52 | 4 | 61 | 14 | 349 | 18 | 38 | 1 | 136 | 9 |
| 5 | 15 | 40 | 9 | 33 | 44 | 65 | 5 | 80 | 27 | 53 | 15 | 61 | 25 | 350 | 27 | 38 | 9 | 136 | 6 |
| 6 | 15 | 44 | 5 | 34 | 42 | 76 | 2 | 81 | 4 | 54 | 28 | 61 | 36 | 351 | 36 | 38 | 17 | 136 | 3 |
| 7 | 15 | 48 | 2 | 35 | 39 | 89 | 21 | 81 | 40 | 55 | 40 | 61 | 47 | 352 | 45 | 38 | 25 | 135 | 59 |
| 8 | 15 | 51 | 58 | 36 | 37 | 101 | 33 | 82 | 17 | 56 | 53 | 61 | 58 | 353 | 54 | 38 | 32 | 135 | 56 |
| 9 | 15 | 55 | 55 | 37 | 34 | 113 | 58 | 82 | 53 | 58 | 5 | 62 | 9 | 355 | 3 | 38 | 40 | 135 | 53 |
| 10 | 15 | 59 | 51 | 38 | 32 | 126 | 45 | 83 | 30 | 59 | 18 | 62 | 20 | 356 | 12 | 38 | 48 | 135 | 50 |
| 11 | 16 | 3 | 48 | 39 | 29 | 139 | 45 | 84 | 7 | 59 | 43 | 62 | 31 | 357 | 19 | 38 | 56 | 135 | 47 |
| 12 | 16 | 7 | 45 | 40 | 26 | 152 | 57 | 84 | 44 | 60 | 7 | 62 | 42 | 358 | 26 | 39 | 4 | 135 | 44 |
| 13 | 16 | 11 | 41 | 41 | 24 | 166 | 37 | 85 | 22 | 60 | 32 | 62 | 53 | 359 | 34 | 39 | 11 | 135 | 41 |
| 14 | 16 | 15 | 38 | 42 | 21 | 180 | 48 | 85 | 59 | 60 | 56 | 63 | 4 | 0 | 41 | 39 | 19 | 135 | 37 |
| 15 | 16 | 19 | 34 | 43 | 18 | 194 | 3 | 86 | 36 | 61 | 21 | 63 | 15 | 1 | 48 | 39 | 27 | 135 | 34 |
| 16 | 16 | 23 | 31 | 44 | 16 | 208 | 54 | 87 | 19 | 61 | 46 | 63 | 26 | 2 | 55 | 39 | 35 | 135 | 31 |
| 17 | 16 | 27 | 27 | 45 | 13 | 222 | 17 | 87 | 56 | 62 | 10 | 63 | 37 | 4 | 2 | 39 | 43 | 135 | 28 |
| 18 | 16 | 31 | 24 | 46 | 10 | 236 | 34 | 88 | 34 | 62 | 35 | 63 | 48 | 5 | 10 | 39 | 50 | 135 | 25 |
| 19 | 16 | 35 | 21 | 47 | 7 | 250 | 55 | 89 | 11 | 62 | 59 | 63 | 59 | 6 | 17 | 39 | 58 | 135 | 22 |
| 20 | 16 | 39 | 17 | 48 | 5 | 265 | 7 | 89 | 48 | 62 | 59 | 64 | 10 | 7 | 24 | 40 | 6 | 135 | 18 |
| 21 | 16 | 43 | 14 | 48 | 56 | 279 | 18 | 90 | 25 | 62 | 52 | 64 | 21 | 8 | 34 | 40 | 14 | 135 | 15 |
| 22 | 16 | 47 | 10 | 49 | 53 | 293 | 29 | 91 | 2 | 62 | 20 | 64 | 32 | 9 | 44 | 40 | 23 | 135 | 12 |
| 23 | 16 | 51 | 7 | 50 | 50 | 307 | 14 | 91 | 40 | 61 | 49 | 64 | 43 | 10 | 55 | 40 | 31 | 135 | 9 |
| 24 | 16 | 55 | 4 | 51 | 47 | 320 | 49 | 92 | 17 | 61 | 17 | 64 | 54 | 12 | 5 | 40 | 40 | 135 | 6 |
| 25 | 16 | 59 | 0 | 52 | 44 | 334 | 9 | 92 | 54 | 60 | 45 | 65 | 5 | 13 | 15 | 40 | 48 | 135 | 3 |
| 26 | 17 | 2 | 56 | 53 | 42 | 347 | 19 | 93 | 31 | 60 | 13 | 65 | 16 | 14 | 25 | 40 | 56 | 134 | 59 |
| 27 | 17 | 6 | 53 | 54 | 38 | 0 | 38 | 94 | 8 | 59 | 41 | 65 | 27 | 15 | 35 | 41 | 5 | 134 | 56 |
| 28 | 17 | 10 | 50 | 55 | 35 | 12 | 43 | 94 | 46 | 59 | 10 | 65 | 38 | 16 | 46 | 41 | 13 | 134 | 53 |
| 29 | 17 | 14 | 46 | 56 | 32 | 25 | 5 | 95 | 22 | 58 | 38 | 65 | 49 | 17 | 56 | 41 | 22 | 134 | 50 |
| 30 | 17 | 18 | 43 | 57 | 29 | 37 | 19 | 96 | 0 | 58 | 6 | 66 | 0 | 19 | 6 | 41 | 30 | 134 | 46 |
| 31 | 17 | 22 | 39 | 58 | 26 | 49 | 28 | 96 | 37 | 57 | 33 | 66 | 10 | 20 | 16 | 41 | 38 | 134 | 43 |
| 82 | 17 | 26 | 36 | 59 | 24 | 61 | 31 | 97 | 14 | 57 | 0 | 66 | 21 | 21 | 26 | 41 | 46 | 134 | 40 |

## ஆகாய காட்சி.

| தேதி | நா.வி | | கிரகம். | | அஷாம்சம் பா. | கலை. | திசை | தேதி | நா.வி | | கிரகம். | | அஷாம்சம். பா. | கலை. | திசை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 | 10 | 36 | சந்தி | சூரிய | ... | ... | ... | 19 | ... | ... | ... | புதன் | ... | ... | ... |
| ... | 44 | 35 | சந்தி | சனி | 3 | 15 | வடக்கு | 28 | 19 | 50 | சந்தி | சுக்கி | 2 | 19 | வடக்கு |
| 3 | 54 | 29 | சந்தி | புதன் | 7 | 23 | வடக்கு | 30 | 20 | 40 | சந்தி | சனி | 3 | 19 | வடக்கு |
| 4 | 40 | 43 | சந்தி | குரு | 4 | 40 | வடக்கு | ... | 24 | 40 | சூரிய | புதன் | ... | ... | தெற்கு |
| 6 | 24 | 0 | சந்தி | அங் | 5 | 32 | வடக்கு | 31 | 38 | 44 | சந்தி | புதன் | 1 | 24 | வடக்கு |
| 10 | ... | ... | சூரிய | புதன் | 20 | 46 | கிழக்கு | ... | 47 | 3 | சந்தி | சூரி | ... | ... | ... |
| 17 | 13 | 4 | சூரிய | சந்தி | 108 | ... | ... | 32 | 25 | 13 | சந்தி | குரு | 4 | 27 | வடக்கு |

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சித்திரபானு௵ வைகாசிமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865,
பசலி 1351, கொல்லமாண்டு 1117, ஹிஜரா 1361,
இங்கிலீஷ் 1942௵ மேமீ—ஜூன்மீ

| வைகாசிமீ | மேமீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | ச● 5-24 | பர49-12 | சி49-12ம | அமாவாசை, மல மாதம் |
| 2 | 15 | வெள் | அமா8-24 | ❊56-25 | சி56-25ம | கிருத்திகை விரதம் |
| 3 | 16 | சனி | பிர12-25 | ரோ60 | அமி60 | சந்திர தரிசனம் |
| 4 | 17 | ஞா | துதி18-1 | ரோ1-47 | சித்60 | சரஸ்வதி புஷ்கரம் |
| 5 | 18 | திங் | திரு23-23 | மிரு7-48 | அ7-48சி | மாடுவாங்க,விதைவிதைக்க |
| 6 | 19 | செவ் | சது28-11 | திரு13-47 | ம13-47சி | மாச சதுர்த்தி |
| 7 | 20 | புத | பஞ்31-48 | புன19-47 | சித்60 | கரிநாள், மாடுவாங்க |
| 8 | 21 | வியா | சஷ்34-47 | பூச25-12 | அ25-12சி | சஷ்டி விரதம், எருவிட |
| 9 | 22 | வெள் | சப்36-1 | ஆயி29-24 | மர60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 10 | 23 | சனி | அஷ்36-36 | மக30-36 | அ30-36சி | கல்நகை வாங்க |
| 11 | 24 | ஞா | நவ35-59 | பூர31-48 | சி31-48அ | ரோஹிணி1ல் ரவி நா33-28 |
| 12 | 25 | திங் | தச34-48 | உத்31-47 | சித்60 | சர்வ முகூர்த்தம், சீமந்தம் |
| 13 | 26 | செவ் | ஏகா31-47 | அஸ் 31-12 | சித்60 | சர்வ ஏகாதசி, உழவுசெய்ய |
| 14 | 27 | புத | து27-36 | சித்28-48 | சி28-48அ | வியாதியர் மருந்துண்ண |
| 15 | 28 | வியா | திர22-48 | சுவா25-47 | அ25-47சி | கத்திரி முடிவு நா-2-9 |
| 16 | 29 | வெள் | சது17-25 | விசா22 11 | சித்60 | |
| 17 | 30 | சனி | ப○11-24 | அ18-36 | சித்60 | |
| 18 | 31 | ஞா | பிர5-23<br>துதி59-24 | கே14-24 | ம14-24அ | |
| 19 | 1 | திங் | திரு53-24 | மூல 10-12 | சி10-12ம | |
| 20 | 2 | செவ் | சது47-25 | பூரா6-35 | சி6-35அ | |
| 21 | 3 | புத | பஞ்42-0 | உத்3-0<br>திரு59-24 | அ3-0சி | |
| 22 | 4 | வியா | சஷ்37-47 | அவி57-35 | சி57-35ம | |
| 23 | 5 | வெள் | சப்34-12 | சத56-24 | சித்60 | |
| 24 | 6 | சனி | அ31-47 | பூர56-25 | ம56-25சி | |
| 25 | 7 | ஞா | நவ30-36 | உட்57-1 | அமி60 | விதை விதைக்க |
| 26 | 8 | திங் | தச30-0 | ரே59-24 | சித்60 | விவாகம், கிருஷியாரம்பம் |
| 27 | 9 | செவ் | ஏகா31-47 | அசு60 | சித்60 | சர்வ ஏகாதசி, மருந்துண் |
| 28 | 10 | புத | து34-12 | அசு3-0 | ம3-0சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 29 | 11 | வியா | திர34-47 | பர❊7-48 | சி7-48ம | கிருத்திகை விரதம் |
| 30 | 12 | வெள் | சது42-1 | கார்13-12 | சி13-12ம | மாச சிவராத்திரி |
| 31 | 13 | சனி | ●46-48 | ரோ19-11 | அ19-11சி | சர்வத்திர அமாவாசை |
| 32 | 14 | ஞா | பிர51-37 | மிரு25-48 | சித்60 | மிதுனரவி நா-47-53, நிஜ ஜேஷ்ட சுத்தம் |

(Rows 19–32: 1942௵ ஜூன்மீ)

| சுக் | | சூரி-புத சனி | குரு அங் |
|---|---|---|---|
| கே | 11-மிது-புத<br>13-மே-சுக்<br>20-கட-அங்<br>28 ரிஷப-புத | | ராகு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO, 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள், மேக வாய்வு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சுபோல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், பேதி, இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து. இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

# எலிக்ஸ்ரைன்

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, நீர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப் புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும்.



இம்மருந்து வெகு பிரயாசையின்பேரில் அதிகப் பணச் செலவினாலும், அநேகவிதமான மலையாள மூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டும் முறைப்படி தயார் செய்தது.

இம் மருந்தை யுட்கொண்டு, தங்கள் தேகத்தில் உள்ள வியாதியை அகற்றுங்கள். உண்மை விளங்கும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

20-நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக் கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூ. **2—4—0.**

**தனலட்சுமி கம்பெனி நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒருவிதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினாலுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியையுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றாது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒருமுறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# நாக்குப்பூச்சியை நாசமாக்கும் பில்லை

இந்த பில்லைகள் ஒரு வருடத்துக் குழந்தைகட்கு அரை பில்லையும், மற்றவர்கட்கு 1 அல்லது 2 பில்லைகளும் கொடுத்தால் வயிற்றிலுள்ள சிறு கிருமிகள் யாவற்றும் பந்து பந்தாய் வந்துவிடும். 8-பில்லை விலை அணா 6.

# காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு தலைசிறந்த ஒளடதமாகும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. குணத்தில் சிறந்தது:—

இருமல், காசம்! இளைப்பு, ஈளை, கபம், குரலடைப்பு, தொண்டைக் கம்மல், தொண்டை வலி, மார் தடிப்பு, வலி, க்ஷயம் முதலிய வியாதிகளை குணப்படுத்துகிறது,



மார்பிலும், தொண்டையிலும், சுவாச நாடிகளிலும், குழாய்களிலும் ஏற்படும் ரணங்களை ஆற்றி, இருமலைத் தணியச் செய்து கபத்தை அறவே ஒழித்து, சளியோடு ரத்தம் வருதல், மஞ்சள் நிறமாக வருதல், இளைப்பு காணுதல், பலஹீனம், உடப்பு மெலிதல், ஆயாசம், மூச்சுத் திணரல், கை கால் அசதி, சுவாசகாசம், ஜுரம் முதலியவைகளை குணப்படுத்தி, ரத்த சுத்தி செய்யும் என்பதை இதை உபயோகித்து உண்மை அறியவும். ஆண் பெண் யாவரும் பத்தியம் இன்றி சாப்பிடலாம்.

**30–நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2—8—0.**

---

கனலட்சுமி கம்பெனி. நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

## மானிடர்க்கு மகிழ்ச்சியைத்தரும்

# மகா சந்தனாதித் தைலம்

அன்பர்களே! வெயிற்காலத்திற்கு இன்பந்தரும் இந்த மகா சந்தனாதித் தைலம், சிறந்த பல மூலிகைகளாலும், உயர்ந்த சந்தனக்கட்டைச் சத்தினாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான கற்க வகைகளினாலும் சித்த ஆயுர்வேத முறைப்படி பெரும் பிரயாசையின்மேல் செய்யப்பட்டு இப்போது வெளிவந்திருக்கிறது.



நூற்றுக் கணக்கான பணச் செலவின்மேல் தீர்க்க வேண்டிய வியாதிகளை யெல்லாம், இந்த சந்தனாதித் தைலத்தினால் தீர்த்துக்கொள்ளலாம்; இதற்குப் பல கனவான்கள் அநேகம் நற்சாக்ஷிப் பத்திரங்கள் அனுப்பியிருக்கின்றனர்.

இத்தைலத்தை வாரத்திற்கு இரண்டு முறையாக, சிரசில் தேய்த்துச் சிகைக்காயிட்டு வெந்நீரில் ஸ்நானஞ் செய்து வருவதால் கண்ணெரிச்சல், கண்களில் நீர் வடிதல், காதுநோய், தலைப்பாரம், மூளைக் கொதிப்பு, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, சாலேச்வரம், பித்த பாண்டு, காமாலை, அஸ்தி சுரம், நாவரட்சி, கைகால் எரிவு, தேக வெளுப்பு, மேக ரோகங்கள், அதிக வெட்டையினாலுண்டான துர்நாற்றங்கள், சொறி, சிரங்குகள், நமைச்சல், பீனிசம், கபால சூலை முதலிய வியாதிகள் நீங்கித் தேகத்திற்குச் சுகமுண்டாக்கும்; ஞாபக சக்தி அதிகப்படும்; கண்ணிற்கு நல்ல ஒளியுண்டாகும்.

இதைத் தேய்த்து நீடித்து ஸ்நானஞ் செய்து வருவதால் மூளையின் கொதிப்பு நீங்கிக் குளிர்ச்சி யுண்டாகும்; மூளை அதிர்ச்சி, துடி துடிப்பு, தலை நமைச்சல் முதலியவைகளும் நீங்கும்; மற்ற ரோகம் அறவே ஒழிந்து விடும்; பித்தத்தினால் நரைத்த உரோமங்கள் கருமை யடையும்.

இத்தைலம் தேய்த்து ஸ்நானஞ்செய்த தினத்தன்று சீதள பதார்த்தங்களையும், தயிர் மோர் முதலியவற்றையும், பகல் நித்திரை, ஸ்திரீ சம்போகம் முதலியவைகளையும் நீக்கவேண்டும்.

இதன் விலை 1 சேர் தைலம் அடங்கிய டின் ரூபா 1–12—0
,, ½ ,, ,, 1—0—0

# இமயகிரி சஞ்சீவித் தைலம்

இது உள்ளுக்கும் மேலுக்கும் உபயோகிக்கக்கூடிய சிறந்த ஔஷதம். ஜலதோஷம், தொண்டை நோய், தலைவலி, கழுத்து நோய், ஜுரம், ஜன்னி, பிடிப்பு, வாந்திபேதி, ஈழை இருமல், இரைப்பு, அஜீர்ணம், வயிற்றுவலி முதலான வியாதிகளை உடனே கண்டிக்கும். இதன் சிறந்த குணத்தை அனுபோகத்தில் தெரிந்துகொள்ளலாம்.

புட்டி 1-க்கு விலை அணா 8. புட்டி 3-க்கு விலை ரூபா 1—4—0

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# அயக்காந்த சத்தின் திராவகம்

இந்தத் திவ்ய ஔஷதம், விஷ சுரம் முதலிய எத்தகைய ஜுரத்தினும் தேகம் மெலிந்து வெளுத்துப்போனவர்களுக்கும், வேறு பல வியாதிகளால் தாக்கப்பட்டுப் பலமற்றுப் போனவர்களுக்கும், தாது விருத்தி நாட்டங்கொண்டு பல மருந்துகளைச் சாப்பிட்டு குணமடையாதவர்களுக்கு இது ஒரு அமிர்தமாகும் என்றே நிச்சயமாகக் கூறுவோம். இம்மருந்தை உட்கொள்வதால் மல ஜலம் தாராளமாய்க் கழிந்து பசியின்மையைப் போக்கி ஜீர்ண சக்தியைக் கொடுத்துப் பரிசுத்த இரத்தத்தைப் பெருக்கும். தாது விருத்தி உண்டாகும். தேகம் சிவப்படைந்து முகம் வசீகரமாகும்.



இம்மருந்தைச் சாப்பிடுகிறவர்கள் தேக திடத்தைப் பெற்று, வலிவுள்ள மக்களைப் பெறுவார்கள். சகல இன்பங்களையும் அனுபவிக்கலாம். ஆண்பெண் இருபாலரும் எப்பொழுதும் உபயோகிக்கலாம்.

பெரியவர்கள் ஒரு அவுன்ஸ் தண்ணீர் அல்லது பசும் பாலில் 10, 12 துளி வரையிலும், சிறியவர்கள் 2-முதல் 6, 7 துளிகள் வரையிலும் காலை மாலை இரு வேளையும் சாப்பிடவேண்டும். இதற்கு யாதொரு பத்தியமுமில்லை. எல்லா ஏழைகளும் வாங்கி உபயோகிக்கும்பொருட்டே மிகக் குறைந்த விலைக்கு விற்கிறோம். ஒரு மாதம் சாப்பிடக்கூடிய மருந்தின் விலை அணா 12. தபால் செலவு வேறு.

# சிவப்பிரகாச பல் பொடி

இந்தச் சிவப்பிரகாச பல் பொடி மற்ற இதர பல்பொடிகளைப் போலிராமல், அதிக சுகந்தமாகவும், பல் வலி, பல்லில் சொத்தை, ஈறு வளர்ந்திருத்தல், வாய் ரணம், வாய் நாற்றம், பல்லாட்டம் முதலிய வியாதிகளை நீக்குவது மல்லாமல், பல் கண்ணாடிபோல் துலங்கும்படிச் செய்யும். வாயில் சதா கம கம வென்னும் மணத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கும். ஒரு மாதத்திற்கு உபயோகிக்கக்கூடிய பல் பொடி டப்பி 1-க்கு விலை அணா 2.

6 டப்பிகள் அணா 10.



---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# ஜீவாதார சஞ்சீவி திராவகம்

இது தங்கம், அயம், மற்றும் சில சத்துப் பொருள்களைச் சேர்த்து அநுபோக முறையில் தயார் செய்யப்பட்டதாகும். சரீரத்திலுள்ள நாடிகளும் தளர்ந்து பலங் குறைந்து அகால மரணத்துக் குள்ளாகும் கொடிய விபத்துக்கு இத்திராவகம் கைகண்ட சஞ்சீவியைப் போன்றது. இது சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து, ஆயுளை விருத்திசெய்து, பலவீனம், கைகால் ஓய்ச்சல், சோம்பல், தேகம் மெலிதல், ஜீரணக் குறைவு, புளியேப்பம், பசியின்மை, ஞாபகக் குறைவு, தைரியமின்மை, தாது நஷ்டம், கண்டமாலை, மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, மார் நோய், சரீரம் வெளுத்தல் முதலிய வியாதிகளை ஒரு வாரத்திற்குள் மாந்திரீகம்போல் குணப்படுத்தும். இது வரையில் எந்த வைத்தியர்களாலும் கண்டுபிடிக்கப்படாத அவுஷதம் இதுவே என்பதை இதை உட்கொண்ட ஐந்து நிமிஷத்தில் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரையிலும் உபயோகிக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூ. 1. புட்டி 3-க்கு விலை ரூ. 2—8—0.



# மோஹினி பரிமள கூந்தல் தைலம்




இந்தத் தைலத்தை கூந்தலில் தடவிக் கொண்டால் அன்று மலர்ந்த புஷ்பங்களின் வாசனைக்கு நிகராயிருக்கும். கூந்தலுக்கு வளர்ச்சியைத் தருவதுடன் தலைக் கொதிப்பையும் அடக்கி தேகத்திற்கு ஆரோக்கியத்தைத் தரவல்லது. இதன் விலை அணா 12.

## சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 4-வரையில் தேகதிடமறிந்து சாப்பிட்டால் சுகமாய்ப் பேதியாகிவிடும். இம் மாத்திரையை சிறு குழந்தைகளுக்கு 1-மாத்திரை முதல் தேக திடமறிந்து முலைப்பாலில் உபயோகிக்கலாம். வாய்க் கசப்பு, கொமட்டல், நெஞ்சு கரகரப்பு, வாந்தி, வயிற்றுவலி முதலிய எவ்வித கெட்ட குணம் கிடையாது. உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

24-மாத்திரை புட்டி 1-க்கு விலை அணா 4.

---

தனலட்சுமி கம்பெனி, நே. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# காப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை யெரிச்சல், தொண்டைக் காகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும். புட்டி 1-க்கு விலை ரூபா 1.

# கள்ள நோய் நிவாரணி

## இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் ஏற்படும் கள்ளநோய், நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக்கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தின் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியனை இரா. 3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை அணு 14.

# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய விடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும். புட்டி 1-க்கு விலை அணு 8.

---

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை
என்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங் கெட்டா
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால் [ல்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கருதரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



# சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடி வயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு சோத்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0. தபாற்செலவு பிரத்தியேகம்.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, சென்னை.